# தீந்தமிழுக்கு
# தி. மு. க.
# இடும் தீ!




தா. பாண்டியன்




யன்

13, ராமகிருஷ்ணன் தெரு, சென்னை-1.

# தீந்தமிழுக்கு
# தி. மு. க. இடும்
# தீ!




தா. பாண்டியன்




வெளியிடுபவர் :
தா. பொன்னிவளவன்

13, ராமகிருஷ்ணன் தெரு,
சென்னை—1

JANASAKTHI

# தீந்தமிழுக்கு தி.மு.க. இடும் தீ!

## ‘அகாரணமாய்த் தமிழை நிறுத்தினால் . . . ?’

“அகாரணமாய் ரயிலை நிறுத்தினால் அபராதம் ரூ. 50 விதிக்கப்படும்” என்ற அறிவிப்பை எல்லோரும் படித்திருப்பீர்கள். இந்த அபராதத் தொகையான ரூ. 50, 250 ஆக உயர்த்தித் திருத்தப்பட்டுள்ளது. இந்தத் தண்டத் தொகையைத் திருத்திய அந்தக் கைகள், ‘அகாறணத்தை’த் திருத்தவில்லை. போதாக் குறைக்குத் தமிழகத்தில் ஓடும் ரயில்களிலும் அறிவிப்பில் இந்தி முதலிடத்தைப் பிடித்துக் கொண்டுள்ளது. தமிழ் ‘அகாறணமாக’ மூன்றாவது இடத்துக்குத் தள்ளப்பட்டுள்ளது. இது நமது அரசாங்கம் கடைப்பிடிக்கும் மொழிக் கொள்கைக்கு ஒரு அவமானச் சின்னமாக விளங்குகிறது.

இந்த லட்சணத்தில் தேசிய ஒருமைப்பாட்டைக் காக்க இந்தி தேவை என்று புலம்புகின்றனர். இந்தி ஆட்சிமொழியாக இல்லாத போதும் இந்தியா ஒன்றுபட்டுத்தான் நின்றது. அது இனியும் ஒன்றுபட்டே நிற்கும். மொழிச் சிக்கலை மேலும் சிக்கலாக்கக் கூடிய முறையில் தேசீய ஒருமைப்பாட்டுடன் முடிச்சுப் போடக்கூடாது. 14 மொழிகளும், 14 மாநிலங்களிலும் ஆட்சி மொழியாவதன் மூலம்தான், தாயகத்தின் மீதான பற்றை வளர்க்க முடியும். நாட்டின் ஒற்றுமையை வளப்படுத்த இயலும்.

1937–ல் இந்திக்குள் சுதந்திரப்போர் உறைவதாகக் கூறி, இந்தியை எதிர்ப்போர் சுதந்திரத்தை எதிர்ப்போர் எனத் திரித்துக் கூறியதுபோல், இன்று ஒருமைப்பாட்டின் விரோதிகள் எனக் கூறிவிடக் கூடாது.

தமிழகத்தின் நிர்வாகம் முழுக்க முழுக்கத் தமிழில் நடைபெறவேண்டும். இந்தி இணைப்பு மொழியாக மட்டுமே இருக்கவேண்டும் என்பது ஒருமைப்பாட்டைப் பேணுமே அன்றி, சிதைக்காது. இதற்கு மாறாக நடந்தால்தான் சிக்கல் எழும்.

அடுத்து, இந்தி மீதான வெறுப்பை வளர்த்து, ஆங்கில மோகத்தை உரம் போட்டு வளர்ப்பதும் தமிழை 'அகாறணமாக'த் தடுத்து நிறுத்துவதாகும். ரயிலை நிறுத்தினால் தண்டனையுண்டு. தமிழின் முன்னேற்றத்தை நிறுத்தினால், என்ன அபராதம் என்பதை மக்களே தீர்மானிக்கட்டும்.

இனி ஆட்சியாளரும், பிற கட்சியினரும் மொழிக் கொள்கையில் கடைப்பிடிக்கும் கொள்கைகளை ஆராய முற்படுவது நலம். தமிழைத்தடுத்து நிறுத்தும் குற்றவாளிகளைக் கண்டு பிடிக்க அது பெரிதும் துணைபுரியும்.

## சட்டம் திருந்தியது

1950-இல் இந்திய அரசியல் சட்டம் நிறைவேற்றப் பட்டது. அச்சட்டத்தில் இந்திய நாட்டிற்கு, இந்திய மக்கள் பேசும் மொழி ஒன்றை இந்நாட்டின் ஆட்சி மொழியாக்க வேண்டும் என்பதற்காக 17-வது பிரிவு சட்டத்தில் சேர்க்கப்பட்டது. இந்திய மக்கள் பேசும் மொழியில், பெரும்பான்மையினர் பேசும் மொழி இந்தியாக இருப்பதால், அதனையே ஏற்றுக்கொள்ள, அன்றைய சட்டத் தயாரிப்பாளர் முடிவு செய்தனர். இந்தி பெரும்பான்மையினரால் பேசப்படுகிறது என்பதோடு, நிர்வாகத் துறையில் பயன்படுத்த லகுவான மொழி எனவும் வாதிடப் பட்டது. வளர்ச்சி பெற்ற பிற மொழிகள் இருப்பினும், அவை பெரும்பான்மையினரால் பேசப்படவில்லை என்பதால், தேசிய மொழிகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டனவே அன்றி, மத்திய அரசின் ஆட்சி மொழியாக ஏற்கப்படவில்லை.

அன்றைய பாராளுமன்றத்தில் இருந்தவர்கள் ஏறத்தாழ அனைவருமே காங்கிரசார். 1950-இல், சுதந்திரம்

பெற்று சில ஆண்டுகளே ஆகி இருந்ததால், மொழி போன்ற பிரச்சினைகளில் மக்கள் அதிக கவனம் அன்று செலுத்தவில்லை. ஆட்சியாளர்மீது அன்று இருந்த பற்றும், நம்பிக்கையும் இதற்கு மேலும் ஒரு காரணமாகும்.

இன்று நிலைமை வெகுவாக மாறியுள்ளது. மொழி யுணர்வு இன்று மேலோங்கி நிற்கிறது. ஆட்சியாளர் மீதும் அன்றிருந்த அளவு நம்பிக்கை இன்று இல்லை. இதற்குக் காரணங்கள் பல.

மொழியுணர்வு மேலோங்கி நிற்பதற்கு, சுதந்திர நாட்டில் தேசிய இனங்கள் தங்களது நல உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள முயல்வதே காரணம். இதற்கும் மேலாக, இந்தி மொழி பேசுவோரிடையே ஆதிக்கம் செலுத்தும், வெறியர் கூட்டம் போடும் வெறிக் கூச்சல், பிற தேசிய இனங்கள் மத்தியில், நியாயமான சந்தேகங்களை வளர்த்துள்ளன.

1965 முதல் இந்தியே ஆட்சி மொழி ஆகவேண்டும் எனச் சட்டம் வரையறை செய்திருந்தது. ஆனால் அந்த இடத்தில் அமரும் இந்திமொழி இன்னும் வளர்ச்சி பெற்ற பாடில்லை, என்று குறை கூறப்படுகிறது. ஆக்கப் பொறுத்தும் ஆறப்பொறுக்காத இந்தி வெறியர் கூட்டம், **சட்டத்தில் எழுதப்பட்டுவிட்ட ஒரே காரணத்தால்** இந்தி பிறமொழிகளைக் காட்டிலும் ஒருபடி அந்தஸ்தில் உயர்ந்தது என்று மமதை கொண்டனர். இந்த மமதை காரணமாக, வேறு மொழிகளை, கற்றுக்கொள்ள முன் வராததோடு, அவற்றைத் தாழ்வாகக் கருதுவதைப்பற்றி பெருமையாக சண்டப் பிரசண்டம் அடித்துக்கொண் டனர். இது எரியும் நெருப்புக்கு எண்ணெய் வார்த்த கதையாயிற்று.

இந்தியாவிற்கென்று, இந்திய மக்கள் பேசும் மொழி ஒன்றுதான் ஆட்சி மொழியாக இருப்பது நியாயம் என்று கருதுவோர்கூட, இந்த அறை வேக்காட்டு மொழி வெறி யர்களால், தங்களது கருத்துக்களை மறுபரிசீலனை செய்ய வேண்டியதாயிற்று. இதன் பின்னர் ஆங்கில நீடிப்பு மசோதா வந்தது. நிறைவேறியது. இந்தியை 1965-இல் ஆட்சிமொழியாக்கவேண்டும் என்பதற்குப் பதிலாக,

ஆங்கிலமே நீடிக்கட்டும் என்று மசோதா சட்டமாக்கப் பட்டுள்ள சூழ்நிலையில்தான் இந்தி எதிர்ப்புப் போராட்டம் தமிழகத்தில் ராஜாஜி தலைமையில் நடத்த, முதற்படியாக, அவரது அரசியல் தோழர்களான தி.மு.க.கள் மாவட்ட மாநாடுகள் கூட்டி, மாநில மாநாடும் நடத்தி முடித்துப் போராட்ட திட்டத்தையும் வெளியிட்டு விட்டனர்.

இம்மொழிப் போராட்டம் குறித்து; இதன் முழுத் தன்மையையும் முழு வரலாற்றையும் நாம் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம். எனவே சற்றுப் பழைய கதையை நினைவூட்டிக் கொள்வது நல்லது.

## சுதந்திரப் போர்

இந்தியாவின் விடுதலைக்காகப் போராடி வந்த தேசிய இயக்கமான காங்கிரஸ், வெறும் படித்த கூட்டத்தாரின் மாநாடு கூட்டி மகாராணிக்குத் தாழ்மையான விண்ணப் பம் அனுப்பும் இயக்கமாக இருந்த நிலைமை மாறி, காந்தி யடிகளின் தலைமையில் மக்கள் இயக்கமாக வடிவெடுத்த பின்னர், காங்கிரஸ் கட்சியின் ஸ்தாபன அமைப்பை மொழிவழி மாநில முறைக்கேற்பவே அமைத்தனர். அந் தந்த தேசிய மொழியிலேயே சுதந்திரப் பிரச்சாரமும் நடந்தது. கல்வி உலகிலும், இலக்கிய உலகிலும் செய லற்றுக் கிடந்த வட்டார மொழிகள் பலவும் அரசியல் உலகில் நடமாடத் தொடங்கின. தமிழ் பல்கலைக் கழகம், சட்டமன்றம், வழக்கு மன்றம் இவற்றில் காணப்படா விட்டாலும், மக்கள் கூடிய அரசியல் மேடைகளில் முழங்கக் கேட்டனர். பல்லாண்டு ஒடுங்கி கிடந்த பின்னர், முதன் முறையாக இந்திய மொழிகள் மீண்டும் ஒரு துறையில் தங்களது இடத்தை மீண்டும் பிடித்துக் கொண்டன.

வெள்ளையனை எதிர்த்துப் போராடும் சுதந்திர உணர்வை நமக்கு ஊட்டியதும், அரசியல் ஞானத்தைக் கொடுத்ததும் ஆங்கிலம்தான் என்று பக்கப்பார்வை பார்த்து, அவியல் கருத்தைக் கக்குவோர் இந்த அடிப் படை வரலாற்று உண்மையை மூடி மறைக்கின்றனர்.

வெள்ளையனை எதிர்த்துப் போராடி, தூக்குமேடை யேறிய கட்டபொம்மன், ஆங்கிலம் படித்தவன் அல்ல. இவனைப் போன்றுதான் வேலுத்தம்பியும்! ஜான்சி ராணி யும்! இன்னும் பல்லாயிரம் பேரும்! சுதந்திர உணர்வைத் தாய்மொழியும், தாய்நாடும்தான் ஊட்ட முடியுமே அன்றி, அடிமைப்படுத்தியோரின் மொழியே அப்பணியைச் செய்தது என்பது முழு உண்மை ஆகாது. பிற்காலத்தில் படித்த பலர் சுதந்திரப் போரில் கலந்து கொண்டதற்கும், தாய்நாட்டுப் பற்றுத்தான் காரணமே அன்றி அழகிய ஆங் கில மொழி அன்று. ஆங்கிலம் பயின்றோரில் பெரும் பகுதியினர் அரசாங்க உத்தியோகங்களில் ஒட்டியிருந்த னர். வேறு சிலர் வெளியிலிருந்து வெள்ளையனுக்குத் துதி பாடி வாழ்ந்தனர். இது வரலாற்று உண்மை. இந்த உண்மையை காந்தியடிகள் உணர்ந்தார். அதனால்தான் இந்திய மக்களைக் கிராமங்களில் கண்டார். பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் 'ரிக்ரூட்டிங் ஆபீஸ் அவர் திறக்கவில்லை, ராம ராஜ்யத்தைக் கிராம ராஜ்யத்தில் கண் டார் என்பது, இந்நாட்டு மக்களை, இந்நாட்டு மொழி பேசு வோரில்தான் கண்டார் என்பதாகும். எனவே கிராமம், கிராமம் என்றார்.

இதன் விளைவு தேசிய இயக்கம் மக்கள் இயக்கமாய் மலர்ந்தது. இந்திய நாட்டில் பல மொழி பேசும் மக்களும் ஒரே நோக்குடன், ஒரே குறிக்கோளை அடைய, ஒரே அணியில் நின்று போராடினர். காட்டிக் கொடுத்துக் கொண்டிருந்த ஒரு சிறிய கூட்டம் சுடைசியில் தோற்றது. மக்கள் வென்றனர்.

இவ்வாறு சுதந்திர இயக்கத்தை நடத்த, மொழிவழி யாக இயக்கத்தை அமைத்து, அம்மக்களின் மொழியி லேயே அரசியல் போராட்டம் நடத்தி வளர்ந்து, வெற்றி கண்ட காங்கிரஸ், ஆட்சி பீடம் ஏறியவுடன், தான் ஏறி வந்த ஏணியையே காலால் உதைத்துத் தள்ளிற்று. அக் கட்சியே கூறி வந்த கொள்கைகள் சிலவற்றைச் செயல் படுத்த மறுத்தது,

மொழிவழி மாநில அமைப்பை எதிர்த்து மக்களின் எதிர்ப்புக்கு ஆளாகியது. எழுந்து வந்த மக்களின் தேசிய,

இன, மொழி, கலாச்சார. உணர்வுகளைப் புரிந்து கொள்ளாமல் உதாசீனம் செய்தது, மாநிலங்களுக்குப் பெயர் மாற்றம் கோரும்போதெல்லாம் எதிர்த்த ஒன்றே இதற்குச் சான்று. கலை, இலக்கிய. மொழித்துறையில் அது செத்த பாம்பாய்க் காட்சி தந்தது, மொழியுணர்ச்சியை தேச விரோத உணர்ச்சியெனத் தவருக மதிப்பிட்டு சிலர் பிதற்றவும் செய்தனர்.

காந்தியடிகள் இருந்தவரையில் 'ஆமாம் சாமி' போட்டு வந்த பயிற்சி மொழிக் கொள்கையை. அமைச்சர்கள் பரிகசித்தனர். ஆங்கிலத்தின் மோகத்தில் தாங்கள் சிறந்தவர்கள் எனக் காட்டிக்கொள்ள அவர்கள் வெட்கப்படவே இல்லை. சுருங்கச் சொன்னல். மொழிப் பற்றி, கட்சி ரீதியாக அவர்கள் விவாதித்து ஒரு முடிவெடுத்து அதனை நிறைவேற்ற முயல்வதாகத் தெரியவில்லை. இது பற்றிச் சிந்திக்கிருர்களா ? என்பதுகூடச் சந்தேகமாயுள்ளது. இக்குறைகளும் இன்றைய சந்தேக வளர்ச்சிக்கு ஒரு காரணம்.

மொழிவழியில் மாநிலம் பிரிய, தெலுங்கன் ஸ்ரீராமுலு உயிரைப் பலியிட நேரிட்டது. தமிழன் சங்கரலிங்கன் சாக நேரிட்டது. நாஞ்சில் தமிழர்கள் பட்டம்தாணுப் பிள்ளையிடம் சூடு வாங்க நேரிட்டது. பம்பாயில் காட்டேரி கட்டவிழ்த்து விடப்பட்டு, மொரார்ஜியின் ஆசியுடன் ஊழிக்கூத்தாடியது. மொழிவழி மாநிலங்களுக்கான ஒரு பெரும் போர் நடந்தது என்றே கூற வேண்டும். இதில் காணப்பட்ட மந்த புத்தியும், மக்களின் மனத்தைப் புரிந்து கொள்ளாத தன்மையும்தான் இன்றைய மொழிக் கொள்கைகளிலும் நிழல் படிந்திருக்கிறது.

1962வரை சென்னையில் கல்வி அமைச்சராய் இருந்த திரு. சி. சுப்பிரமணியம் தமிழைப் பயிற்சி மொழியாக்குவேன் என்று உறுதியுடன் பேசினர். சில துணிச்சலான நடவடிக்கைகளையும் மேற்கொண்டார். ஆனல் அடுத்து வந்த அமைச்சர் பக்தவத்சலம், தமிழைக் குப்புறத் தள்ளி குழியை வேறு பறிக்கிருர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் லட்சுமணசாமி முதலியாரே கல்வி மந்திரியாகிவிட்டாரோ எனச் சந்தேகிக்க வேண்டிய

அவசியம் இனி இல்லை. இரு முதலியார்களில் எவர் இருந்தாலும், தமிழைப் பொறுத்தமட்டில் இருவர் நிலையும் ஒன்றே!

ஒரே கொள்கை! ஒரே நோக்கு! அதாவது தமிழுக்குத் தாழ்ப்பாள். ஆங்கிலத்துக்கு அரியணை. திரு. சி. சுப்பிரமணியம் தமிழே என்றார். அதே காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திரு. பக்தவத்சலம் தமிழைப் புறக்கணிப்புடன் மூன்றாம் வகுப்பு முதல் ஆங்கிலம் கற்பிக்க நடவடிக்கைகள் எடுத்துவிட்டார். இதுவும் கட்சியின் கொள்கை தானா? இல்லையெனில் தனி மனிதர்களின் சொந்தத் தாண்டவமா?

இது எப்படி இருப்பினும் அமைச்சர் பக்தவத்சலம் கடைப்பிடித்து வரும் கொள்கை தமிழின் வளர்ச்சியைக் கெடுக்கும். தமிழர்களின் வெறுப்பை மட்டுமே வளர்க்கும். இவர் காங்கிரஸ் கட்சியின் பெயரால் ஆட்சி நடத்துவதால், இவரது கொள்கையால் பாதிக்கப்படும் தமிழர்கள் காங்கிரசின் மீது பாய்வது இயற்கையே. காங்கிரஸ் கட்சி மொழிக் கொள்கையைத் தெளிவாக்க முன்வர வேண்டும். பக்தவத்சலத்தின் போக்கைத் தடுத்து நிறுத்த வேண்டும். பயிற்சி மொழிக் கொள்கையில் காந்தியடிகள் கூறிய கருத்துக்களே மிகவும் சரியானவை. அதை நிறைவேற்ற பல்கலைக் கழகத்தின் சுய நிர்ணய உரிமை "Autonomous body" என்ற அராஜக நிலைமையை முடிவுக்குக் கொண்டு வர வேண்டும்.

பல்கலைக்கழகம் பற்றிய சட்டத்தையே மாற்றியமைக்க வேண்டும். சோஷலிஸ சமுதாய அமைப்பை நோக்கி முன்னேறுவதை லட்சியமாகக் கொண்ட நாட்டில், அதன் ஆட்சி பொறுப்பு அலுவல்களை ஏற்க இருப்போருக்குக் கொடுக்கப்படும் கல்வி பயிற்சி, லட்சியத்திற்கு நேர் எதிராக உள்ளது. குடை ராட்டினத்தில் எத்துணை வேகத்தில் சுற்றினாலும் அது அந்த வட்டத்தில் தானே வளையம் போடும். அதே நிலைதான் இன்றைய கல்வி முறைக்குப் பள்ளிகள், மாணவர்கள், ஆசிரியர்களின் எண்ணிக்கை பெரிதானாலும்கூட, அது வளையத்தில் சுழலும் சுழற்சி தான். இது நிற்க!

செட்டி நாட்டரசர் என்றும் ராஜா சர். முத்தையா செட்டியார் என்றும் அழைக்கப்படும் திரு. முத்தையா செட்டியாரும் காங்கிரஸ்காரர்தான். இவர் மற்றொரு பெரும் பல்கலைக் கழகமான அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் புரவலர். இவரும் மேடை தோறும் ஆங்கிலம் இந்திக்குப் போடும் அணை என்று 'முழங்கி' வருகிறார். இவரும் காங்கிரசின் கொள்கையைத்தான் வலியுறுத்து கிறாரா ? மத்திய கல்வி அமைச்சர் கபீர் வட்டார மொழியே பயிற்சி மொழியாக வேண்டும் என்கிறார். ஆனால் தமிழ் நாடு 'பட்டல்' அதனை உடைத்தெறிகிறார். காங்கிரசாரின் இந்த இருதலை மணியன் கொள்கை போக வேண்டும்.

ரயில் வண்டிகளை எடுத்துக் கொள்ளுங்கள். விளம் பரம், அறிவிப்பு அனைத்திலும் இந்தி முதலிடம் பெற்று விட்டது. தமிழகத்தில் ஓடும் வண்டிகளில் தமிழ் தான் முதலிடத்தில் இருக்க வேண்டும். இதை வெறும் உணர்ச்சித் தீனிக்காகச் சொல்லவில்லை. தமிழன் பிரயா ணம் செய்கையில், அவனுக்குக் கொடுக்கப்படும் அறி விப்பு எடுத்த எடுப்பில் அவன் கண்ணில் படவேண் டாமா ? இந்தச் சாதாரண நடைமுறைத் தேவையைக் கூடப் புறக்கணித்து இந்தி சவாரி செய்ய முயல்வது விந்தையல்ல ! வேதனையானது.

இதேபோல மாநிலங்களில் பணியாற்றும் **மத்திய அலு வலக சிப்பந்திகள்** அந்தந்த மாநில மொழியில் தேர்ச்சி பெற வேண்டும் என்ற கட்டாயம், பரீட்சை ஒன்றும் இல் லாதபோது, இந்தியில் அவசியம் தேற வேண்டும் என வற்புறுத்துவது ஒருபால் சார்வது அல்லவா ? இதனைச் செய்வதும் காங்கிரஸ் அரசாங்கமே. அஞ்சல் அட்டை, அஞ்சல் உறை, பணவிடைத் தாள்கள் தமிழில் கொடுக் கப்படும் முன்னர், இந்தியில் அச்சிடப்பட்டு இங்கு விநியோகிக்கப்பட்டதும் முறை கேடானது. அஞ்சல் துறை சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள் அந்தந்த மாநில மொழியிலிருத்தல் மிகவும் அவசியம்.

1937-இல் ராஜாஜி செய்த தவறுகளும், காங்கிரசின் தவறுகளே! ஆனால் அவற்றை ராஜாஜியின் நிலையை எடுத்துரைக்குமிடத்தில் விவாதித்துள்ளேன்.

காங்கிரசார் செய்த இந்தத் தவறுகள்தான் மொழி எதிர்ப்பு என்ற பெயரால் சில பிற்போக்காளர்கள் எதை எதையோ பேச, செய்ய ஏதுவாகி விட்டது. அவர்கள் தாங்கள் செய்த, செய்து வரும் தவறுகளை உணர்ந்து திருந்தா விட்டால் அதுவும் பிற்போக்குக் கூட்டத்துக்கு ஒரு பேராயுதமாகக் கிடைக்கும்.

# தாய் நாட்டுக்கும் தாய்மொழிக்கும் துரோகம்

**ராஜாஜி**

"நீங்கள் விட்டாலும், நான் விடமாட்டேன். சாகும் வரை போராடத் தி ட் ட மி ட் டு வி ட் டே ன்" எனச் சூளுரைத்து, இந்தி மொழி எதிர்ப்பில் இறங்கியுள்ளார் ராஜாஜி. 1937-இல் இந்தியைப் புகுத்த முயன்றபொழுதும் இதேபோன்ற உறுதியுடன்தான் பேசினார். ஆனால் அன்றும் வெற்றி காணவில்லை. இன்றும் வெற்றி காண மாட்டார்!

1937-இல் ராஜாஜி இந்தியை ஏன் புகுத்த முயன்றார்? அதற்கு எதிர்ப்பு சூருவளியெனக் கிளம்பியது, ஏன்? என்பதைப் புரிந்து கொள்ளாவிட்டால், தேசிய இனங்களின் நலஉரிமைகளைப் புரிந்து கொள்ளாமல் மீண்டும் தவறு செய்ய நேரிடலாம். அத்துடன் 1937-இல் இருந்த அதே இந்தி மொழிக் கொள்கையைத்தான் இன்றைய அரசாங்கம் கடைப்பிடிக்கிறதா? இல்லை—அதில் மாற்றம் ஏற்பட்டுள்ளதா? மாற்றம் உண்டெனில் நமக்குச் சாதகமா? பாதகமா? என்பனவற்றையும் கோபதாப, விருப்பு, வெறுப்பு, உ ண ர் ச் சி க ளை மூட்டை கட்டி மூலையில் போட்டுவிட்டு, தமிழைக் காக்கத் "தன்னைத்தான், இரண்டாயிரம் ஆண்டுகளாக வயிற்றில் வைத்து உருக்கொடுத்து, திருக்கொடுத்து,

தமிழன்னை பெற்றெடுத்தனுப்பிய தமிழ்க் காவலன்'' என்ற அகம்பாவ எண்ணத்தையும் ஒதுக்கிவிட்டு, 3 கோடி தமிழர்களின் பொதுவான பிரச்சினையில், இந்திய மொழிகளின் முன்னேற்றத்துக்கு, உதவக்கூடிய, அல்லது முட்டுக்கட்டையாக இருக்கக்கூடிய ஒரு முக்கிய சிக்கலைப்பற்றிப் பேசுகிறோம், எழுதுகிறோம் என்ற நினைவுடன் உணர்வுடன் இதை அணுக வேண்டும்.

இந்தி எதிர்ப்புப் போர் என்ற முழக்கத்தை கிளப்பியுள்ளவர்கள் தி. மு. கவினர். இதற்கெனப் பாசறை கட்டினர். தளபதியை அமர்த்தினர். வழக்கம்போல முரசு கொட்டினர். சுவரொட்டியும் ஒட்டினர். முழக்கம்! முழக்கம்! ஒரே முழக்கம்! கடைசியில் சட்டத்தை எரிப்பது, டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்வது, மத்திய அரசாங்க அலுவலகங்கள் முன் மறியல் நடத்துவது மந்திரிகளுக்குக் கருப்புக்கொடி காட்டுவது,—இவ்வாறு சில மக்களின் மனத்தைக் கவரக்கூடிய, கூட்டத்தைக் கூட்டக் கூடிய, சிறுவர்களும் விளையாட்டுக்காகச் செய்யக்கூடிய சிலவகைப் போராட்டங்களை உருவாக்கி நடத்தத் திட்டமிட்டுள்ளனர். போராட்டம் நடத்துவது தி. மு. க! திராவிட நாட்டுக்காக அல்லவாம்! ஏனெனில் அது செத்துவிட்டது. கொள்கைக்காகக் கட்சிகள் செத்தது உண்டு. ஆனால் இங்கோ கட்சிக்காக—கொள்கை காவு கொடுக்கப்பட்டது.

## எங்கும், எதிலும் இந்தியா?

1937–இல் காங்கிரஸ் சென்னை மாநிலத்தில் நீதிக் கட்சியை முறியடித்துச் சுடுகாட்டுக்கு அனுப்பிவிட்டு ஆட்சிபீடத்தைக் கைப்பற்றியது—மாநில முதன் மந்திரி யானார் ராஜாஜி. இந்தி மொழியைக் கட்டாய பாடமாக்கினார். இந்தி, இந்தியாவின் ஆட்சி மொழியாக ஆக இது முன் தயாரிப்பு என்றார். ஆங்கிலத்திற்குப் பதிலாக இந்தி, இந்தியாவின் ஆட்சி மொழியாகும் என்றார். அந்நிய மொழி விலக்கப்படும். இந்திய மொழி அந்த இடத்தை நிரப்பும் என்றார். இதற்குமேல் விளக்கம் கொடுக்கவில்லை. காங்கிரஸ் கட்சியினர்க்கும், பெருவாரி இந்திய மக்களுக்

கும் அன்று இருந்த சுதந்திரப் போர் வெறியில், மொழி, கலை, சிறுபான்மையினர் உரிமைகள் மிகமிக அற்பமாகப் பட்டன. அது இயற்கையே! ராஜாஜியின் கருத்தே காங்கிரஸ் கட்சியின் கருத்தாகவும் இருந்தது.

சுதந்திரப் போர் வெறியின் காரணமாக, காங்கிரஸ் கட்சி மொழிச் சிக்கலை ஆழமாகச் சிந்திக்காமல், உணர்ச்சியால் உந்தப்பட்ட முடிவுகளுக்குத்தான் வந்தது. அந்நியன்மீது கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்த எதிர்ப்பு இதற்குப் பெரிதும் துணை புரிந்தது. ஆனால் அரசியல் போராட்டம் முடிந்து, பொருளாதார வளர்ச்சி ஏற்படுகையில், ஒவ்வொரு தேசீய இனமும் தனது நலஉரிமைகளை, பண்பாட்டை, மொழியை,ப் பாதுகாக்க முயலும்—போராடும்; என்ற சிறிய உண்மையை அன்று அவர்கள் யாரும் எதிர்நோக்கவில்லை. அவர்களிடம் முழுப் பார்வை இல்லை.

இந்தியா சுதந்திரம் பெறவேண்டும் என்பதற்காக 'எதையும், செய்யும் எவனும் தியாகி' 'அச்சுதந்திர உணர்வுக்கு எதிராக எதைச் சொன்னாலும் துரோகி' என்று கருதப்பட்ட காலம் அல்லவா? எனவே நாட்டின் விடுதலையில் நாட்டம் கொண்டிருந்த பலர் இந்தி மொழி ஆட்சி மொழியாவதுபற்றி விவாதிப்பதும், வட்டார மொழிகளுக்குப் பாதுகாப்பு வேண்டும் எனக் கோருவதும்கூட சுதந்திரப் போருக்குக் குறுக்கே நிற்குமோ? என அஞ்சினர். வாய் மூடினர். சுதந்திரப் போருக்கு உதவ மொழிச் சிக்கலை எழுப்பாமல் இருப்பது உதவி என எண்ணினர். சுதந்திரம் என்ற தாரக மந்திரத்தையே மனத்தில் நிறைத்துக்கொண்டிருந்தவர்கள் மொழிபற்றிய சிந்தனையைப் 'பார்க்கலாம்' எனத் தள்ளிப் போட்டனர். ஆனால், மற்றவர்களைக் காட்டிலும் தான் அதி புத்திசாலி என்பதை அடிக்கடி எடுத்துக் காட்டி வருபவரல்லவா ராஜாஜி. அம்முறையில்தான் இந்தியைப் புகுத்த முனைந்தார். "ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி—அந்நிய மொழிக்குப் பதில் இந்திய மொழி" என்றார்.

இதன் உண்மைப் பொருளும், விளைவுகளும், திரு. வி. க., மறைமலை அடிகள், நாவலர், போன்ற தமிழறிஞர்

களைக் கலக்கமடையச் செய்தது. அவர்களும் இந்தி எதிர்ப்பில் இறங்கினர்.

திரு. வி. க. எதிர்த்த இந்தி மொழிக் கொள்கை வேறு. இன்று எதிர்க்கப்படும் இந்தி வேறு. திரு. வி. க இந்தியை எதிர்த்த சூழ்நிலையும், எதிர்த்த காரணங்களும் வேறு. இன்று அவர் பெயரைப் பயன்படுத்துவோர் கூறுங் காரணங்களும், எதிர்க்கும் மொழிக் கொள்கையும் வேருகும். 1937-இல் ''ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி'' என்றதன் முழு அர்த்தம் என்ன ?

கீழே இருக்கும் கிராம அதிகாரி தொடங்கி கவர்னர் முடிய ஆங்கிலத்துக்குப் பதில் இனி 'இத்தமிழகத்தில்' இந்தியை எழுதவேண்டும். ஆரம்பப்பள்ளி முதல் பல்கலைக் கழகம்வரை ஆங்கிலத்துக்குப் பதில் இந்தியைத் தமிழர்கள் பயன்படுத்த வேண்டும். கீழ்த்தட்டிலுள் மாஜிஸ்டிரேட் கோர்ட் முதல் சென்னை உயர்நீதி மன்றம் வரை ஆங்கிலத்துக்குப் பதில் இந்தியைப் பயன்படுத்த வேண்டும். இதுதானே ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி என்பதன் பொருள். இதில் தமிழைப்பற்றிய பேச்சே இல்லை.

இப்பொருளின் பேராபத்தை உணர்ந்தார் திரு. வி. க. ஆரம்பப் பள்ளியில் ஆங்கிலத்துக்குப் பதில் தமிழா ? இந்தியா ? ஆங்கிலம் வேண்டாம் தமிழ் வேண்டும் என்ருர் ; ராஜாஜியோ இந்திதான் என்ருர். எனவே எதிர்ப்புக் கிளம்பிற்று. எல்லா மட்டங்களிலும், எல்லாத் துறைகளிலும் ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி என்ருல், தமிழன் நிலை என்னவாகும்? மெல்ல அல்ல, விரைவில் சாகும்.

இருக்கின்ற பேய் போதாது என்று, புதியதொரு பூதமா ? எனப் பயந்தனர் தமிழன்பர்கள். அதனை, சமய முளபடிக்கெலாம் சதிகள் பல செய்யும் சுமடர் தங்களுக்குச் சாதகமான சுதந்திர எதிர்ப்புப் போராகவும் பயன்படுத்திக் கொண்டனர் என்பதையும் மறந்துவிடக்கூடாது.

காங்கிரஸ், இந்தியாவுக்கு சுதந்திரம் வாங்கினல், தமிழை அழித்து ஒழித்துத் தீர்த்துக் கட்டிவிடும். எனவே ஆங்கிலேயன் தொடர்ந்து என்றென்றும், என்றுமுள தென்றமிழ்போல ஆளட்டும் என லாலி பாடிய ''டமிளனும்''

உண்டு. ஆங்கிலம் எங்கெங்கு பயன்படுத்தப்பட்டதோ, ஆட்சி புரிந்ததோ, அத்தனை இடத்திலும் இனி இந்திய மொழியான இந்தி அரியணை ஏறும் என ராஜாஜி திருவாய் மலர்ந்தருளினர்.

'கிராம ராஜ்யமே, ராம ராஜ்யம்' என்றார் காந்தி. அவ்வாறு கிராம ராஜ்யம் என்று ஒருபுறம் குறிக்கோளை வற்புறுத்திக் கொண்டிருக்கையில், இந்திதான் அதற்கு ஆட்சி மொழி என்றால், கிராமங்களுக்கும் அது பரவும் என்றுதானே பொருள். அந்நிலை வந்தால் தமிழன் நிலை என்ன? என சிந்தித்தனர்.

ராஜாஜி போலீஸ் உண்டு. அவர்கள் கையில் துப்பாக்கியுண்டு. துப்பாக்கியில் குண்டு உண்டு. சிறையிலும் இடம் உண்டு என்று பதில் சொன்னர்.

இந்த நாடகம் 1937–இல் நடந்தது. ராஜாஜி இவ்விதம் இங்கு குழப்பத்துக்கு வித்திட்டுக் கொண்டிருந்த அதே காலத்தில் காந்தியடிகள் மொழிபற்றிய தனது மிகத் தெளிவான, ஜனநாயக, தேசீய மொழிக் கொள்கையை ஆணிமுத்தென, இன்னமுதென வெளியிட்டார்.

படித்த பட்டதாரிகளின் கட்சியாக விளங்கிய காங்கிரசை பாட்டாளிகளும் கூடிய தேசீயப் பாசறையாக்கிய ஏழையர் பங்காளன் வந்தார். காங்கிரசின் உருவும் உள்ளடக்கமும் மாறிற்று.

மாடமாளிகைகளை விட்டுக், காங்கிரஸ் கட்சித், தரித்திர நாராயணர்களைத் தேடிப் புறப்பட்டது. குள்ளக் குடிசையில் பள்ளத்தில் வாழ்வோரின் கள்ளமற்ற உள்ளம்கருணையாளனைக் கவர்ந்தது. நகரத்திலிருந்து கிராமத்தை நோக்கியும், மாளிகையை விட்டுக் குடிலை நோக்கியும், தண்டனிட்டு மனுப்போடுவதை விட்டு மக்களைக் கூட்டித் திரட்டுவதிலும் முன்னேறத் தொடங்கியது.

ஆங்கிலத்திற்குப் பதில் இந்தி என்றார் ராஜாஜி. மொழிவழி மாநிலப் பிரிவுப்படி காங்கிரஸ் இயக்கத்தைத் திருத்தி யமைத்தான் சிற்பி காந்தி.

அடுத்து ஆங்கிலப் பேச்சைத் தவிர்த்து, மக்கள் பேசும் மொழியில் பிரச்சாரம் தொடங்கியது. காந்தியடி

களை இந்திய மொழிகள் பலவற்றையும் கற்றார். ஆங்காங்கு அம்மொழியிலேயே பேசவும் முயன்றார்.

காந்தியடிகளும் அந்நிய மொழியை அகற்றிவிட்டு இந்திய மொழிகளை அந்த இடத்தில் அமர்த்துவதுதான் குறிக்கோள் என்றார். ஆனால் காந்திஜி சொன்னது அன்றும் சரி. இன்றும் சரி. ராஜாஜி சொன்னது அன்றும் தவறு! இன்றும் தவறு!

ஒரு சொல்லில் ஒரு எழுத்துக்கூடினால், குறைந்தால் எவ்வளவு பொருள் மாறக்கூடுமோ அவ்வளவு வேறுபாடு, இங்கும் தோன்றுகிறது. வாழ்த்தில் 'ழ'கரத்தை நீக்கினால் அது வாத்தாகி விடுவதுபோல.

ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி என்ற ராஜாஜியின் கருத்துப்படி ஆரம்பப்பள்ளி முதல் பல்கலைக் கழகம் முடிய ஒரே ஹை ஹை! 'ஹோ ஹோ' ஆகி முடிந்திருக்கும். ஆனால் காந்தியடிகளின் சொற்படி நம் இன்பத் தமிழ் கொலுவிற்று குளுகுளவென ஆட்சிபுரியும். உள்ளமும் உணர்வும் களிகொள்ளத் தமிழன், அப்பாடா! எனப் பெருமூச்சு விடுவான். காந்தியாரின் கொள்கை அந்நிய மொழியை அகற்றி இந்திய மொழியைத் தான் பயிற்சிமொழியாக்கியது. காந்தியடிகள் இந்தியாவிற்கு ஒரே ஒரு மொழி என்று சொல்லவில்லை. மாறாக, கல்வி போதனையில் அம்மாநில மக்கள் பேசும் மொழியே என்றார். மாநில ஆட்சிக்கும் அதுவே என்றார். இந்திய ஆட்சிக்கு மட்டுமே இந்தி என்றார். அவர் வரையறுத்துச் சொன்ன முறை ஒருபுறமிருக்க அவர் மொழிச் சிக்கல் பற்றிய கருத்து வேறுபாடுகள் எழுந்த காலத்தில் அவற்றை அணுகிய முறையையும் உற்று நோக்கவேண்டும்.

காந்தியடிகள் தோழர் ஜீவாவிடம் மொழி பற்றிக் கேட்ட சில கேள்விகளும் அதுபற்றி ஜீவா அவர்கள் பூரிப்புடன் சொன்ன விபரங்களும் இதற்கு ஆயிரக் கணக்கான சான்றுகளில் ஒன்றாகும்.

காந்தியடிகள்: உங்களுக்கு இந்தியை முதன் மொழியாக ஏற்க முடியுமா?

ஜீவா: முடியாது. எனக்குத் தமிழ்தான் தாய் மொழி. முதன் மொழி.

காந்தி : தாய்மொழிதான் ஒவ்வொருவருக்கும் முதன் மொழி. அதுவல்லாமல் இந்தியை அத்துடன் சேர்த்துப் படிக்கலாம் அல்லவா ?

ஜீவா : எனக்கு அடுத்துள்ள மொழிகளே அடுத்துப்படிக்க விரும்புகிறேன்.

காந்தி : நல்லது! அப்படியானுல் இந்தியத்தொடர்புக்காக இந்தியைப் படிக்கலாம் அல்லவா ?

ஜீவா : ஆமாம் படிக்கலாம்.

காந்தி : உலகத் தொடர்புக்காக ஆங்கிலமும் வேண்டும், இல்லையா ?

ஜீவா : ஆமாம். வேண்டும்.

காந்தியடிகள் தனது மோகனப் புன்னகையுடன் அதுதான் சரி ! என்று சொல்லிவிட்டுப்போன நிகழ்ச்சியை வருணிக்கும்போதெல்லாம், காந்தியடிகளுடைய, தாராள மனப்பான்மையை, மாற்ருர் கருத்தை மதிக்கும் சீரிய பண்பாட்டை, தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று நிற்காத, இளகிய மனத்தன்மையை, இந்தியர்களின் பன்மொழித் தன்மையை உணர்ந்து அவை அத்தனையும் சமம் என்று கருதிய உயர்வு தாழ்வு நினைவற்ற அந்த ஒப்பரிய உயரிய குணத்தை வியந்து வியந்து பாராட்டுவார்.

மொழிக் கொள்கை, சாதி சமயச் சீர்திருத்தங்கள் சிறுபான்மையினர் நலன்கள் இவற்றில் இந்தத் தாராள மனப்பான்மை கடைப்பிடிக்கப்படல் வேண்டும். பாதுகாப்பு சிறுபான்மையினர்க்கே என்ற குரல் ஓங்கி நிற்க வேண்டும்.

வீழ்ந்து பட்டவர்கட்கும், தாழ்த்தப்பட்டோர்க்கும் துணை நிற்கவேண்டும். ஆகையால்தான் தீண்டத்தகாதவனுய், உழைக்கவும் உதை வாங்கவும் மட்டுமே பிறப்பெடுத்தவனுய், வீதியில் நடமாடவும் உரிமையற்ற நடைப்பிணமாய் வாழ்ந்த நந்தன் பரம்பரையை எந்தன் சொந்தம் என்று உறவு கொண்டாடிய கண்ணனுக விளங்கினுர் காந்தியடிகள். ஆனுல் ராஜாஜியோ......! நாடறியும் !

எனவேதான் தமிழுக்குப் பாதுகாப்புத் தேட முயன்ற திரு. வி. க.வையும், நாவலர் பாரதியையும் இந்தி எதிர்ப்பு அணிக்கு ராஜாஜி விரட்டினர். தமிழுக்கு உரிய பாது காப்பு உண்டு என்றுகூற அவர் முன்வரவில்லை. "தமிழால் முடியுமா?" என்ற புத்தகத்தை இக்காலத்தில் தான் எழுதினர். அதில் தமிழால் முடியும், எனப் பதில் கூறியிருக்கிருர். ஆனல், அவரது நடைமுறை அதற்கு நேர் மாருக இருந்தது. இவைதான் பல உண்மையான தேச பக்தர்களையும் இந்தி எதிர்ப்பில் போய்ச் சேர்த்தது. காந்தியடிகள் ஒரு வேளை இவர்களைச் சந்தித்திருந்தால், அல்லது அவரது கொள்கை நடைமுறையில் கடைப் பிடிக்கப்பட்டிருந்தால் திரு. வி. க.வின் பெயரை பொப் பிலியின் பேரர்கள் எடுத்துப் படம் போட்டுப் பயன் படுத்தக் கிடைத்திராது.

திரு. வி. க.வின் படத்தைப் பரிசளித்துள்ள ராஜாஜி, தனது ஒத்துழைப்பையும் கொடுக்கத் 'தாளுகவே' முன்வந்துள்ளார். 'முதல் புரோகிதருக்கு' 'இரண்டாம் புரோகிதர்' 'இந்தி எதிர்ப்புப் போர்' என்ற திருமண விழாவுக்கு அழைப்புக்கூட அனுப்ப மறந்து விட்டாராம். 'தண்டவாளத்தில் வந்து கொண்டிருக்கும் குட்ஸ் ஸ்டே ஷனுக்கு வந்துவிடுமோ என்னவோ?'

ராஜாஜியின் இந்தி எதிர்ப்புக்கும் தி. மு. க, வின் இந்தி எதிர்ப்புக்குமே வேறுபாடு இருக்கிறது. அடிப்படை லட்சியங்கள் வேறுபட்டிருந்தாலும் காங்கிரஸ் எதிர்ப்பு என்ற பெயரால் தி. மு. க, லீக், சுதந்திராக் கட்சிகள் ஒன்றிணைந்து நின்றதைப்போல், இந்தி எதிர்ப்பிலும் ஒன் ருகி நிற்கின்றனர். காங்கிரசை அரசியலில் ராஜாஜி எதிர்ப்பதற்கான காரணங்களும், தி. மு. க. எதிர்ப்பதற் கான காரணங்களும் அடிப்படையிலேயே வெவ்வேரு னவை. இதேபோல் ராஜாஜி இந்தியை எதிர்ப்பதற்கும் தி. மு, க. எதிர்ப்பதற்குமே பெரிய வேற்றுமை உள்ளது.

இந்தி எதிர்ப்புப் போரில் ஈடுபட்டுள்ள தி. மு. க. தோழர்களை தமிழ்த் துரோகிகள் என்ரே, விரோதி கள் என்ரே என்னல் சந்தேகிக்க முடியவில்லை. அவர்க ளது தமிழ் உணர்வைக் குறைத்து மதிப்பிடக் கூடாது.

தி. மு. க. தம்பிமாருக்கு தமிழபிமானம் உண்டு. ஆனால் இந்தி எதிர்ப்பு என்ற போராட்டத்தில், ராஜாஜி காட்டும் வழியில், தமிழும் பலியாகும் என்ற **மறைந்துள்ள பேராபத்தை** அவர்கள் இன்னும் உணரவில்லை.

வெள்ளையன் தொடர்ந்து இருப்பதன் மூலம்தான் திராவிடர்களுக்கு ஆரியர்களிடமிருந்து பாதுகாப்பு என்று அன்று கருதியதைப் போலத்தான், இன்று ஆங்கிலம் நீடிப்பதன்மூலம் தமிழுக்கு நல்லது என்று பிரச்சார வேகத்திலை ஏற்றப்பட்ட போதையில் மயங்கி நம்பி இருக்கிறார்கள்.

வெள்ளையன் வெளியேறிய பின்னர் 'ஆரியர்' ஆட்சி ஒன்றும் கொடிகட்டிப் பறக்கவில்லை. மாறாக சேரிவாழ் சகோதரன் படிப்படியாக கூகைக் குகைளிலிருந்து மெள்ள மெள்ள வெளிவருகிறான். ஆரியக் கருத்து முறைச் சாதிப் பிடிப்புகள் இன்றுதான் பலத்த சோதனைக்குள்ளாக்கப்பட்டுள்ளன. இதனை தி. மு. க. தம்பிமார்கள் அனுபவத்தில் உணரமுடியும்.

இதேபோல் ஆங்கிலம் அகன்றால்தான், 'சேரிமொழி' களாகிவிட்ட இந்திய மொழிகள் கூகைக் குகைகளை விட்டு வெளிவர முடியும் என்பதையும் பொறுமையோடு சிந்தித்தால் புரியும். இல்லையெனில் எடுத்து விளக்கிச் சொல்லிப் புரிய வைக்க வேண்டியது தேசிய நலனில் நாட்டம் கொண்டோரின் கடமையாகும். இதனை அரசாங்கம் செய்யட்டும் — அல்லது செய்யும் என்பது, தங்கள் கடமையைத் தட்டிக் கழிப்பதுடன், மக்கள் பிரச்சினையை அரசாங்க பிரச்சினையாக்குவதுமாகும்.

இனி இந்தியை எதிர்ப்போரிடையே உள்ள கருத்து மாறுபாடுகளைப் பார்ப்போம்.

ராஜாஜி 1937–இல் இந்தியைத் திணிக்க முயன்ற காலத்தில், எல்லா இடங்களிலும் ஆங்கிலத்திற்குப் பதில் எல்லா மட்டங்களிலும் இந்தி என்றார். அதே கருத்தை இன்றும் அவர் மாற்றிக்கொள்ள வில்லை. இன்று அதற்கு நேர்மாறாக, எதிர் மறையாக, "English Ever, Hindi Never" என்ற முழக்கத்தைக் கிளப்பியுள்ளார். இது எங்கிருந்து எழுகிறது ?

ஆங்கிலத்திற்குப் பதில் எல்லா மட்டங்களிலும், எல்லாத் துறைகளிலும் இந்தி என்று எவ்வாறு, தமிழை, தெலுங்கை, மராட்டியத்தை, வங்கத்தை மறந்து, இந்தி மட்டுமே என்று பேசினாரோ அதே போலத்தான் இன்றும் இந்தி எல்லா மட்டங்களிலும் முழு ஆதிக்கம் செலுத்தப் போவதாக நம்மை நம்பவைக்க முயற்சித்து, இதனை எதிர்க்க, எப்பொழுதும் போல், என்றும் — எங்கும், என்றென்றும் ஆங்கிலமே என்று ஒரே போடாய்ப் போட்டு விட்டார். இந்திய மொழிகள் எதற்கும் அரியணை ஏறும் வாய்ப்பை இவர் கொடுக்க விரும்பவில்லை. சேரிவாழ் இந்தியன் அரியணை ஏறலாமா ?

காந்தியடிகள் ஏற்றார்.

ராஜாஜி...... ?

பொறுத்திருந்து பாக்கவேண்டும்.

தமிழ் அரியணை ஏறுவதை, பயிற்சி மொழி ஆவதை நீதி மன்ற மொழி ஆவதை ராஜாஜி ஆதரிக்கவில்லை. தமிழ் நாட்டில் இருப்பதால் பகிரங்கமாக சொல்வதில்லை. ஆனால் நிச்சயமாக ஆதரிக்க மறுக்கிறார். 1937–இல் இந்தியைப் புகுத்துவதன் மூலம் தமிழுக்குத் தீங்கு செய்தார். இன்றோ இந்தியை எதிர்த்து ஆங்கிலத்தை ஆதரிப்பதன் மூலம் மீண்டும் தமிழுக்குத் தீங்கிழைக்கிறார். தமிழை வெளிப்படையாக எதிர்க்க முடியாத காரணத்தால், ஆங்கிலத்திற்குள்ள ஆதரவைத் திரட்டி, இந்தி எதிர்ப்பைக்காட்டி, இதனைச் சாதிக்க முயற்சிக்கிறார். இச் சதியைப் புரிந்த பின்னர்தான் தி. மு. க. இவரை ஒதுக்கியதோ என்னவோ ?

தி.மு.க. தமிழ் பயிற்சி மொழியாகவேண்டும், ஆட்சி மொழியாக வேண்டும் — நீதிமன்ற மொழியாகவேண்டுமென மேடைப் பேச்சளவிலாவது இதுவரை பேசி வந்துள்ளது. இவர்களுக்குத் உள்ளூரத் தமிழ்ப்பற்றும் உண்டு. எனவே தமிழகத்திற்கு எல்லா மட்டங்களிலும் தமிழ் வேண்டும். ஆனால் இந்தியாவுக்கு ஆங்கிலம் நீடிக்கட்டும் என்கின்றனர். இதில் உள்ள முரண்பாடுகளை விளக்கும் முன்னர்,

இந்தி எதிர்ப்பு அணியில் சேர்ந்துள்ள வேறு சிலரின் கருத்துக்களேயும் பரிசீலிப்பது நல்லது. ராஜாஜிக்கு அடுத்து நமது கவனத்துக்கு வருகின்றவர் சென்னைப் பல் கலைக் கழகத்தின் துணைவேந்தர் லட்சுமணசாமி முதலி யார் அவர்கள். இவரைப் பொறுத்தவரையில் மொழிக் கொள்கையில் ஒரே உறுதியான கொள்கையைக் கடைப் பிடிக்கின்றவர். அன்றும் அவரது கொள்கை — எல்லாக் காலத்துக்கும், எல்லா மட்டங்களிலும், எல்லாத் துறை களிலும் எல்லாக் காரியங்களுக்கும் ஆங்கிலமே! இந்திய மொழி எதுவும், தமிழ் உட்பட வீட்டோடு இருந்துவிட்டுப் போகட்டும் எனத் தாராள புத்தியுடன் அனுமதி கொடுத் துத் தொலைக்கலாம், என்ற கொள்கை உடையவர். அன் றும், இன்றும் அதே கொள்கை தான். தமிழ் பல்கலைக் கழகத்தில் நுழைய விடாமல் தடுத்தாட்கொண்ட அரு மைத் 'தமிழர்?' இவர். இவரது கொள்கையைத் தி. மு. ஏற்கிறதா ? மறுக்கிறதா ? மழுப்புகிறதா ? மூன்றுவது காரியத்தைத்தான் செய்கிறது. காரணம் சம்பந்தப்பட்ட வர் பழைய நீதிக் கட்சிக்காரர் — முதலியார்! காங்கிரஸ் கட்சியோ, வாய்மூடி மௌனியாகி விட்டது. மொழிப் பற்றிய விழி மூடிவிட்டது.

அடுத்து நம் கருத்தை இழுப்பவர் சர். சி.பி. ராமசாமி ஐயர். நம்மைப் பொறுத்தமட்டில் இவரது "சர் பட்டம் இவரது கருத்தையும் அம்மட்டத்திலேயே வைத்துப் பார்க்குமாறு நம்மைத் தூண்டுகிறது. ஆனல் இந்திய ஒரு மைப்பாட்டுக் குழுவின் தலைவராக இவர் சில காலம் இருந்த காரணத்தால் அவரது கருத்துக்கு ஒரு முக்கியத் துவம் தனியாகக் கிடைத்துள்ளது.

சர். சி. பி. மிகப்பெரும் மேதை என்பதை மறுக்கும் நோக்கம், தேவை நமக்குக் கிடையாது. ஆனல் இந்திய மக்களோடு இரண்டறக் கலந்து வளர்ந்தவர் அல்ல என் பதும், மக்களின் குரலை எடுத்துச் சொல்லும் பயிற்சி, தன்மை, இவரிடம் கிடையாது என்பதையும் நாடறியும்.

இவரும், இந்தி கூடாது ஆங்கிலமே இருக்கட்டும் என்கிறர். அவ்வாறு ஆங்கிலம் வேண்டாம் என்றல், அந்த இடத்தில் அமரக் கூடிய அருகதையுடைய ஒரே மொழி, சமஸ்கிருதமே என்று அழுத்தந்திருத்தமாகக் கூறி

யுள்ளார். இந்தியாவில் மக்கள் பேசக்கூடிய 14 மொழிகளைப் பற்றியும் இவர் கிஞ்சித்தும் கவலைப்படாததுடன், வழக்கில் இல்லாத, அர்ச்சனைக்கு மட்டுமே பயன்படும் மொழியை அரியணையில் அமர்த்த முயல்கிறார். இருப்பினும் இவரையும் இந்தி எதிர்ப்பில் இணைத்துக் கொள்கிறது தி.மு.க. அதாவது, இதுவரை மேடைதோறும் "ஆரியம்போல் உலக வழக்கு அழிந்து ஒழிந்து சிதைந்து" என்று நச்சரித்துக் கொட்டிய அதே மொழியின் ஆதரவாளர்க்கும் ஆதரவு கொடுத்து தங்கள் நிலையைப் பலி கொடுக்கின்றனர்.

இதற்கும் மேலாக 'கல்கி' நடத்திவரும் ஆட்சிமொழி கருத்தரங்கில் ஆலையரசர் கருமுத்து தியாகராசன் செட்டியார், ஆலையரசர் சுந்தரம்; ஆகியோரும், பரசுராமன், கிருஷ்ணசாமி, நெடுஞ்செழியன், ராமச்சந்திரன் ஆகியோரும் பல கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

இவர்கள் கருத்துக்களின் சாரத்தை வடித்தெடுத்தால் எஞ்சி நிற்பது.

(1) ஆங்கிலம் அந்நியமொழி என்றால், 'எங்களுக்கு' இந்தியும் அந்நிய மொழியே.

(2) ஆங்கிலம் பல்லாண்டு இருந்து விட்டதாலும், அது நல்ல முறையில் ஆட்சிக்குப் பயன்பட்டு வருவதாலும் தொடர்ந்து இருப்பதால் தீங்கில்லை. அது நம்மொழியாகிவிட்டது.

(3) இந்தி தகுதியற்ற, வளமற்ற மொழி இலக்கியம் இல்லை.

(4) இந்தி பேசாதோர் பதவிகளை இழப்பர். இனிப் பெறுவதிலும் இந்தி பேசுவோர் ஏற்றம் பெறுவர்.

(5) இந்தி ஆட்சிமொழியானால் இந்தி பேசுவோரின் ஆதிக்கம் கூடும்.

(6) பிறமொழிகளின் வளர்ச்சி பாதிக்கப்படும்.

இவைதான் இவர்கள் வெளியிட்டுள்ள கருத்துக்களில் மிக முக்கியமானவை. இவற்றில் 'தகுதியற்ற வளமற்ற மொழி இந்தி மொழி' என்று சொல்வது கூடாது என்று அறிவுரை கூறியிருக்கிறார் ராஜாஜி. 'இந்தி தகுதியுடைய மொழியாக இருந்தாலும் ஏற்க மாட்டேன்

என்று சொல்லுங்கள் என்ற புதிய தாரக மந்திரத்தை நவ யுகக் கண்ணன் உபதேசித்திருக்கிறர் இது எத்தனை தம்பிமாருக்குப் புரிந்ததோ? தகுதியுடையது, இல்லாதது என்ற அடிப்படையில் பார்ப்பதன் மூலம், தகுதியுடைய தமிழ், ஆங்கிலத்திற்குப் பதில் தமிழகத்தில் ஆட்சிபீட மேறலாமா? என்று கேட்டுவிடுவார்களோ, என்ற அச்சத்தில் தான், முன்கூட்டியே தாழிடுகிறர் என்பதை, அவரது அரசியல் சாணக்கியம் புரிந்து கொண்டோர் தெளிவது இயற்கை. இதனைத் தம்பிமார் உணர்வது நலம்.

இதில் வேறு ஒரு சுயநலச் சூதாட்ட எண்ணமும் இருப்பதாக, சிலர் குற்றம் சாட்டுகின்றனர். தி. மு. க. இந்தி என்ற மொழியே தரங்கெட்ட மொழி என்று தாக்கு வதன் மூலம் தமிழ் இளைஞர்கள் பலர் அதனை வெறுத்து ஒதுக்கக்கூடும். ராஜாஜி இத்தவற்றைச் செய்ய விரும்ப வில்லை. மாறுக 'அவரைப் பின்பற்றுவோர்' ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கில் இந்தியில் பட்டம் பெற்று வருகின்றனர். இந்தி வந்தால் அங்கும் அவர்களிருப்பர். வராது போனலும் எதிர்த்த தலைவனின் வாரிசுகளுக்குப் பங்குண்டு. தோற்றுலும், வென்றுலும் அவரது வாரிசு களுக்கு லாபமேயன்றி நட்டமல்ல. ஆனல் தி.மு.க.வின் நிலை என்ன? இந்தி மொழியையே எதிர்ப்பதன் மூலம் தமிழுக்கும் தீங்கு விளைவிக்கின்றனர்.

இனி இவர்கள் எழுப்பியுள்ள வினுக்களுக்கு விடை காண முயல்வோம். ஆங்கிலம் அந்நியமொழி என்றுல், 'எனக்கு' இந்தியும் அந்நிய மொழிதானே என்று 'கலைத் தந்தை' என்று சில 'டம்ளர்களால்' பட்டம் சூட்டப்பட் டுள்ள கருமுத்தார், சொல்கிறர். கருமுத்தார் பெரிய ஆலையரசர் தொழிலில் கைதேர்ந்தவராக இருக்கலாம் ஆனல் மொழிக்கருத்துக்கூற மக்களின் நலன் அறியா தவர். ஒருமொழியை நம் மொழி, நம் நாட்டு மொழி, அந்நிய மொழி என்று எதனை அடிப்படையாக வைத்துச் சொல்கிறேம்.

அந்நியத் துணி பகிஷ்காரம் நடந்தபொழுது கருமுத் தாரின் மில் துணியை வட நாட்டார் கொளுத்தினரா? இல்லை. பம்பாய்த் துணியைத் தமிழர் கொளுத்தினரா?

ஆனால் அன்று அந்நியப் பொருள் இறக்குமதி எதிர்ப்புப் போரில் உங்கள் தொப்பை கொழுக்கும் வழி கண்டீர்கள். மகிழ்ந்தீர்கள். ஆகா இதுவல்லவா தேசப்பற்று என்றீர்கள்!

அன்று உங்கள் துணியை வட நாட்டார் கொளுத்தியிருந்தால் இன்று 21 மில்களில் இவரால் கொள்ளையடிக்க முடிந்திராது. அதேபோல் தமிழன் வடநாட்டுத் துணியைக் கொளுத்தியிருந்தால்......?

இதே காரணத்தால்தானே வடநாட்டுக் கடை மறியலை உங்களது சேனையான தி. மு. க. ஊறுகாய்ப் பானையில் போட்டு ஊறவைத்து, உரத்திற்குப் போட்டு உழுது விதைத்து அதன்மீது எருக்கு முளைக்கவிட்டது!

உங்களுக்குச் சௌகரியமில்லாத பலவற்றை நீங்கள் மறக்கலாம். ஆனால் இந்நாட்டு மக்கள் மறப்பதில்லை. இதுவாவது பழைய கதை. அண்மையில் உங்களைப் போன்றவர்களைக்கூட துயில் எழுப்பிய மாபெரும் நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

சூயஸ் கால்வாயில் சில ஆண்டுகட்கு முன்னர் போர் நடந்தது. உலகமே திடுக்கிட்டது. நல்லோர் ஆக்கிரமிப்பாளரைக் கண்டித்தனர். நீங்களோ...! அது போகட்டும் ஆனால் அப்போர் இந்திய மக்களைக் கலக்கமடையச் செய்தாலும், (சர்வதேச உணர்வுள்ள தொழிலாளர்களைத் தவிர) கோபங் கொண்டு பரவலாக மற்றவர்களை விழித்தெழச் செய்யவில்லை. ஆனால் இமயத்தில் குண்டுச் சத்தம் கேட்டவுடன் குக்கிராமம் உட்பட, பிரிவினை பேசிய தி.மு.க., மாஸ்டர்! தாராசிங் உள்ளிட்ட இந்திய மக்கள் அனைவரும், நம் எல்லை காக்க வாரீர் என்று முழங்கினர். பத்தினி விரதத்தை முறித்துக் கொண்டு ஆகாஷ்வாணியிலும் இந்நாட்டின் எல்லை காக்க வாரீர் எனப் பேசினர். அந்நிய எல்லை காக்கவா தமிழன் அங்கு போய்ப் போராடி மாண்டான்? சொல்லத் துணிவுண்டா?

சூயஸ் போர், எங்கோ நடக்கும் அந்நியப் போராகத் தோன்றியது. ஆனால் இமயப்போர் இந்தியாவைக் குலுக்கியது. ஏனெனில் "மன்னும் இமயமலை எங்கள்

மலே " என்பதால் " இன்னறும் நீர்க்கங்கை யாறு எங்கள் ஆறே " என்பதால் இந்த அடிப்படையில்தான் நம் நாடு அந்நிய நாடு எனப்பார்க்கிறேம். அந்நிய நாடு என்பது பகை–எதிரி நாடு எனும் பொருளில் அல்ல நம்முடையது அல்ல என்ற அளவில்தான்.

தமிழகத்தில் செக்கிழுத்த சிதம்பரன், கொடிகாத்த குமரன், ஊர் பேர் தெரியாத இன்னும் பல்லாயிரம், பல்லாயிரம் தமிழர்கள் சுதந்திரத்துக்குப் போராடுகையில் " இந்தியா எங்கள் நாடு " என்று முழங்கினர். இந்தியா வுக்கு விடுதலை என்றனர். அதேபோல் 'பஞ்சநதத்துப் பிறந்தோர், பார்த்தன் முதற்பலர் வாழ்ந்த நந்நாட்டின்' சிங்கம் பகத்சிங், குமரி முதல் இமயம் வரை உள்ள நாட்டின் விடுதலைக்காகத்தான் ரத்தப் பொட்டிட்டான். இதனை விரித்துரைக்கத் தேவை இல்லை.

இந்த நாடு ஒன்று. இது நம் தாயகம் என்ற உணர் வும், உண்மையும் வெற்றிபெற ஒரு யுகப் போரே நடந்துள்ளது, இது விடுதலை பெறவும், ஒன்ருக என்றும் நின்று நிலைக்கவும் நடத்தப்பட்டுள்ள போராட்டம் மகத் தானது.

1947–இல் அரசியல் விடுதலை. ஆனல் அப்பொழு தும் இந்தியாவிற்குள்ளேயே தனியாட்சி நடத்திக் கொண் டிருந்த நாடுகள் நானூறுக்கும் அதிகம் இருந்தன. திரு. கொச்சி, பரோடா, ராஜஸ்தான், ஐதராபாத். போன்ற பெரிய சமஸ்தானங்கள் முதல் புதுக்கோட்டை, ராமநாத புரம் போன்ற சிறிய சமஸ்தானங்கள் வரையில். தனித்து நின்றன. இவை ஒவ்வொன்ருக இணைக்கப்பட்டன. இதற்கென நடந்த போராட்டங்களும், செய்த தியாகமும் விவரிக்க முடியாதவை. சர். சி. பி.யை எதிர்த்து, புன்னப் புரா வயலாறிலும், ரஜாக்கன் காசிம் ரஜ்வியை எதிர்த்து தெலுங்கானவிலும் நடந்த போர்கள் மிகப் பெரும் புகழ் மிக்க இதிகாசங்கள். இவை இணைந்த பிறகும், கோவா வும், பாண்டிச்சேரியும், துண்டு துண்டாக, அந்நியர்க ளின் காலடியில் மிதியுண்டு கிடந்தன. கோவா விடுத லைப் போராட்டமும், பாண்டிப் பகுதி விடுதலை வேள்வி யும் கண்ணீரும் செந்நீரும் கலந்தவை.

இவ்வாறு சொல்லொணாத் துன்ப துயரங்களை அனுபவித்து போர் நடத்தி வெற்றி கண்ட பின்னர் விளைந்த இந்திய ஒற்றுமையை, அவமதிக்கக்கூடிய முறையில் இங்கேயே 'இந்தியன் அந்நியன்' என்ற குரல் எழுந்துள்ளது. பழைய பத்தாம் பசலி பாரதத்தைத் துரத்தியடித்து விட்டு எழுந்துவரும் புதிய பாரதத்தைக் கண்டு கோட்டான்கள் கைகொட்டிச் சிரிப்பதைப்போல இருக்கிறது. இதில் இவர்கள் வெற்றி காண முடியாது, இந்த அரசியல் ஒருபுற மிருக்க,

'நம் மொழி—அந்நிய மொழி' என்று எந்த அடிப்படையில் பார்க்கிறோம். அது மக்களால் பயன்படுத்தப்படுவதை வைத்துத்தான். 150 ஆண்டுகளாக நிர்வாக மொழியாக இருந்து வருகிறது ஆங்கிலம். உயர் பதவிகட்காய், உலக அறிவுக்காய், பல்லாண்டு பயபக்தியுடன் படித்தோம். இருந்தும் நிர்வாக இயந்திரத்தை விட்டு, அது வீட்டு மொழியாக மாறவே இல்லை. மாறவும் முடியாது. எனவே வீட்டுக்கு ஒரு மொழியும், நாட்டுக்கு வேறொரு மொழி என்ற இரட்டை வாழ்வு இந்நாட்டில் நிலைத்தது. இவ்வாறு 150 ஆண்டுகட்குப் பிறகும் அது அந்நிய மொழியாகவே நீடிக்கிறது.

ஆங்கிலம் அந்நிய மொழி அல்ல, நம் மொழியாகவே ஆகிவிட்டது என்கின்றனர். இது உண்மைதானா ?

வீட்டு மொழிதான் நாட்டு மொழி ஆக முடியும். இம் முறையில் ஆங்கிலம் எந்தப் படித்தவர் வீட்டிலாவது வீட்டு மொழியாகிவிட்டது எனக் கூற முடியுமா ?

அவர் குழந்தையுடன் ஆங்கிலத்தில் கொஞ்சுவதில்லை. காதலியுடன் குலவ முடிவதில்லை. இத்தனையும் செயற்கையாகச் செய்தாலும்கூட, திடீரென்று பாம்பு வந்தால், ஐயோ பாம்பு-பாம்பு என்று அவரது நா அவரையறியாமலே கூவுமே அன்றி, Snake Snake என்று எச்சரிக்காது. இதேபோல் உற்றாரை இழந்தால் அழும்போது தாய்மொழிதான் நாவில் வரும். மூச்சில் வரும். ஒப்பாரியை யாரும் படித்த மொழியில் சொல்ல முடியாது.

நான் இந்த உதாரணத்தைச் சொன்னவுடன், ஆகா! ஆகா ! இதைத்தானே இந்தி பற்றி நாங்கள் சொன்னோம்

என்று எகிறிக் குதிக்கச் சிலர் முயற்சிக்கலாம். அவசரப் படாதீர்கள்.

இந்தி ஆட்சி மொழியானல் நான் இந்தியில் அழ வேண்டியதில்லை. ஆனல் அம்மொழியில் பேசும், சிரிக்கும், அழும் 15 கோடி பேர் இருப்பதால்தான் அது இந்நாட்டு மக்களின் மொழி என்கிறோம். அது என் இந்திய சகோதரனின் மொழி எனவே எனக்கு சகோதர மொழி. அந்நிய மொழி அல்ல! இதேபோல் ஆங்கிலத்திலும் சிந்திக்க, சிரிக்க, பேச, அழ, ஆங்கிலோ-இந்தியர்கள் இல்லையா எனக் கேட்கத் தோன்றும். உண்மை. ஆகையால்தான் ஆங்கிலமும் ஒரு மொழியாக இருக்கட்டும் என்கிறோம். ஆனல் சில லட்சம் பேரே பேசும் மொழியையும், பல கோடி பேர் பேசும் இந்திய மொழியையும் ஒரே தராசில் வைக்கலாமா?

எனக்குப் புரியாத இந்தி. எனக்கு அந்நிய மொழி தானே என வாதிடுவது வாத முறைக்குப் பொருந்தாது. ஏனெனில் தி. மு. க. வினர் மலையாளம், கன்னடம், தெலுங்கு, தமிழ் ஆகிய மொழிகளைத் திராவிட இனமொழி என்கின்றனர். இதில் தெலுங்கோ, மலையாளமோ, தி. மு. க. வினருக்குத் தெரியாததால் அதனை அந்நிய மொழி என்பதில்லை, மாறாக எங்கள் இன மொழி என்கின்றனர். இதனல்தான் 'மொழிவழி பிரிந்து, இனவழி கூடுவது என்றனர். தனக்குப் புரியாவிட்டாலும், தன் இனத்தான் பேசுவதால் அது நம் மொழியே என்று கூறுவது போலத்தான் இந்தியர்களுக்கு இந்தியன் பேசும் மொழி நம் நாட்டு மொழியாகிறது. அந்நிய மொழி ஆவதில்லை.

இந்தியின் தரக்குறைவு என்ற பெயரால் தரங்கெட்ட தாக்குதலில் நாம் இறங்காததற்கும் இதுவே காரணம், ஏனெனில் பெற்றெடுத்தவள் கண் காது இழந்தாலும், நரைதிரை மூப்பெய்தி கூன் விழுந்தாலும் அவளே தாய்! கண்ணை இழந்து விட்டதால் என் தாயல்ல என்று கூறுபவன் பிள்ளையல்ல! அழகுக்காக அழகி கிலரை அழைத்து வந்து இவள்தான் என் அம்மா என்போமா? அதுபோலத் தான் வளர்ச்சி குன்றியிருப்பினும் இந்திதானே அவனுக்குத் தாய்மொழி.

மொழித்துறையில் இந்தியைத் தீண்டத்தகாத மொழியாக வெறுக்கவைக்க தி. மு. க, முயல்வதைப்போலவே நமது தாழ்த்தப்பட்ட சகோதரர்களை ஒதுக்கிவைத்திருந்த அமைப்பு ஒன்று இருந்தது. அவர்கள் இந்த சகோதரர்களைத் திறமையற்றவர்கள் என்றும், அவர்கள் முன்னேற முடியாதவர்கள் என்றும் பேசி வந்ததை நினைத்துப் பார்த்தால் தி. மு. க. புது 'அக்ராகரத்தை' உண்டாக்க முயல்வதை அறியலாம்.

ஆனால் அது தோற்றதுபோலவே இதுவும் தோற்கும்.

இந்தியா என்பதை ஒப்புக்கொள்ளமாட்டேன், எனக்குத் திராவிட நாடுதான் என்றால், சமாச்சாரமே வேறு.

அதனை எதற்கும் அஞ்சாமல், மறைக்காமல் அப்படியே துணிவுடன் சொல்ல வேண்டும். 'நான் இந்தியா ஒரு நாடு என்பதை ஒப்புக்கொள்ளவில்லை, எனவே இந்தியையும் என் நாட்டு மொழியென ஒப்பேன்' எனக் கூறினால் நம்மால் புரிந்துகொள்ள முடியும். இதனை மூடி மறைத்து அவலை நினைத்து உரலை இடிப்பது ஆண்மைக்கு அழகல்ல!

பறிபோன திராவிட நாட்டுப் பெட்டிக்கு இந்திதான் சாவி என்று நினைத்தால் ஏமாந்து போவீர்கள் இதனை 'இந்து' பத்திரிகை தனது அக். 15-ம் தேதி தலையங்கத்தில் சுட்டிக்காட்டிக் கண்டித்திருப்பது வரவேற்கத்தக்கது.

தி. மு. கழகம் நடத்த இருக்கும் போராட்டத்தைப் பற்றி நாம் கவலைப்படவில்லை. ஆனால், இதனையொட்டி அவர்கள் செய்யக்கூடிய தவறான பிரச்சாரத்தால் எழக்கூடிய பூச்சாண்டியைப் பொய்யாக்க வேண்டியது தமிழைக் காக்க விரும்புவோரும், இந்திய ஒற்றுமையை நாடுவோரும் செய்ய வேண்டிய கடமையாகும்.

தி. மு. கழகம் நடத்தும் போராட்டம் ஒரு அரசியல் கட்சிப் போராட்டமாகிவிட்டதே என ராஜாஜி வருந்தியிருப்பது இங்கு நோக்கத்தக்கது. ராஜாஜியும் ஏமாந்துவிட்டாரா? தி. மு. க.வின் மறைமுக திராவிட நாட்டுப் பிரிவினைப் பிரச்சாரத்துக்கு ராஜாஜி உதவமாட்டார் என்பது தெளிவாகி இருந்திருக்க வேண்டும். இத்துடன்

இதில், ராஜாஜியின் நிலைமையும் எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டதாகி விட்டது. தி. மு. க. இந்தி எதிர்ப்பு மகா நாடுகளில் கலந்து கொண்ட ராஜாஜி, தான் ஒரு தனி மனிதன் என்ற முறையில் கலந்து கொள்வதாகவும் சுதந் திராக் கட்சி சார்பில் கலந்துகொள்ளவில்லை யென்றும் கூறினர்.

ஏனெனில் சுதந்திராக் கட்சியிலேயே ராஜாஜியின் இந்தி எதிர்ப்புக் கொள்கைக்குப் பெரும்பான்மை ஆதரவு கிடையாது. அதற்கும் மேலாக எதிர்ப்பு மேலோங்கி நிற்கிறது. சுதந்திராக் கட்சி அகில இந்தியக் கட்சி. ராஜாஜியின் மொழிக் கொள்கை மூன்ஷியையும், மசானி யையும் ஆபத்துக்குள்ளாக்கி விடும். வடநாட்டில் அக் கட்சி அழியக்கூடும். இதனால் தனிமனிதனாய் பரிவாரம் இல்லாமல் போய் நின்றார்.

தன் கட்சியை, தனக்கு நேர்மையெனப் பட்ட கொள் கையை ஒத்துக்கொள்ள வைக்க முடியாத ராஜாஜி, ஆளுங்கட்சி மட்டும்தான் சொல்வதைக் கேட்கவேண்டும் என ஏன் கேட்கிறார் என்பது நமக்குப் புதிராக உள்ளது. உங்களால் தோற்றுவிக்கப்பட்ட கட்சியே உங்கள் யோசனையைத் தூக்கி எறியும்போது, உங்களது எதிரி மட்டும் தூக்கிக் கொஞ்சுவானா?

என் கொள்கையை ஏற்காவிட்டால் சாகும்வரை போராடுவேன் என்று ஆட்சியாளருக்கு எச்சரிக்கை விடும் ராஜாஜி, தன் கட்சித் தோழர்களையும் மன்னிக்க- கனவான்களையும் ஏற்கச் சொல்லி முதலில் போர் தொடங்குவாரா! முதலில் உங்கள் கட்சியை ஒத்துக் கொள்ள வையுங்கள். ராஜாஜி, 'சாகும் வரை விட மாட்டேன்', எனச் சூளுரைத்து இதற்காகப் போராடினால் நல்லது.

ராஜாஜியின் இந்தச் சாணக்கியம் மொழிச் சிக்கலை மேலும் சிக்கலாக்க உதவுமேயன்றி, தீர்க்க உதவாது. தி. மு. க.வின் போராட்டமும் அரசியல் நோக்குடையதே யன்றி, மொழிக்காக மட்டும் நடத்தப்படும் போராட்டம் அல்ல.

## தமிழில் சட்டம் இல்லையே !

கல்கியில் வெளிவந்துள்ள கட்டுரை ஒன்றில், 1000க்கும் மேற்பட்ட நிர்வாகச் சட்டப் புத்தகங்கள் ஆங்கிலத்தில் இருக்கின்றன. இவற்றையெல்லாம் இந்தியில் என்று மொழி பெயர்ப்பது? மொழி பெயர்க்க முடியுமா? என்ற கேள்விகளை எழுப்பியிருக்கின்றனர்.

தமிழகத்தில் தமிழ் ஆட்சி மொழியாக வேண்டுமென்றாலும், இதே சிக்கல் எழும். ஆங்கிலத்தில் சட்ட புத்தகங்கள் இருக்கின்றன. தமிழில் இல்லை என்பதால், தமிழ் வேண்டாம் எனக் கூறமுடியுமா? அதனைத் தமிழில் மொழி பெயர்த்தாகவேண்டும். சிரமமின்றி எந்த நல்ல காரியமும் உலகில் நடப்பது இல்லை. இவற்றைச் சிரமப் பட்டேனும் மொழி பெயர்ப்பதன் மூலம்தான் தமிழ் மேலும் ஒரு படி வளரும். தேவை ஏற்படும்போதுதான், அத் தேவையை நிறை செய்ய நாம் உழைக்கிறோம். தேவையில்லாதபோது ஆற்று மணலை அள்ளிக் கொட்டுவார் இல்லை. தேவை எழுந்தால் மாபெரும் மலைகளும் உடைக்கப்படுவது கண்கூடு. இந்த மனித ஆற்றலில் நம்பிக்கைவேண்டும்.

இதற்கும் மேலாக, இந்த ஆங்கிலம் படித்த மோகத்தில் மூழ்கியிருப்போர், இந்நாட்டில் ஆங்கிலேயன் வருவதற்கு முன்பும் ஆட்சிகள் நடைபெற்றன. சட்டங்கள் இருந்தன. நீதி பரிபாலனமும் நடைபெற்றது என்பதை மறுக்க முடியாது. ஆங்கிலச் சொற்கள் இல்லாத காரணத்தால் நீதியும், ஆட்சியும் இல்லாது போய் விடவில்லை. இன்று சொல்லுக்கு முக்கியத்துவம் கொடுத்து நீதியை முடமாக்க முயல்வது முறையல்ல. இன்று வழக்கு மன்றத்தில் பயன்படுத்தப்படும் (Writ of Certiorari, writ of Mandamus, Lex Loci, Mens Rea) போன்ற பல சொற்றொடர்கள் ஆதித் தமிழகத்தில் இல்லை. ஆனால் இச் சொற்கள் இல்லையெனினும் பாண்டியன் நெடுஞ்செழியன் செம்மாந்த நீதி- வழங்கத்தான் செய்தான்.

அவனது பரம்பரையினர் இந்த வார்த்தைகள் இல்லாவிடில் நீதியேது? என வினவுவது, ஆங்கிலக் கல்வி, நம்

சொந்தப் பெருமையைக்கூட உணரவிடாமல் கொன்று விட்டதன் கோரத்தைப் புரியலாம்.

ஸ்விட்சர்லாந்தை உதாரணம் காட்டி எல்லா மொழிகளும் ஆட்சிமொழியானுல் என்ன எனக் கேட்கப்படுகிறது. இவர்கள் மொழிக் கொள்கையைப் படித்துவிட்டு எழுதினுல் நல்லது.

ஸ்விட்சர்லாந்து மிகச் சிறிய நாடு. மக்கள் தொகை மிகக் குறைவு. 80 லட்சம் பேர் இது ஒரு புறமிருக்க, இன அடிப்படையில் என்ருவது அங்கு பிரிவினை இயக்கம் நடந்தது உண்டா? இந்த உதாரணத்தை தி.மு.க. முதலில் ஏற்கட்டும். இந்தியாவிலும், இந்திய மொழிகள் அனைத்தும்தான் ஆட்சிமொழி ஆகப்போகின்றன. 14 மாநிலங்களிலும் 14 மொழிகளும் ஆட்சி புரியும். இணைப்புக்கு மட்டும்தான் இந்தி. உண்மையில் அன்றட நிர்வாகத்தில், நேரடியாக தம்மொழியோடுதான் மக்களுக்குத் தொடர்பு இருக்கும். இந்தியைப் பொறுத்தமட்டில் நிர்வாக இயந்திரத்தோடு சரி. எனவே உண்மையில் எல்லா மொழிகளும் ஆட்சி மொழியாகின்றன. இவ்வாறு எல்லா மொழிகளும் ஆட்சி மொழி ஆனுல், ஆங்கிலத்தின் நிலை என்ன? 14 மாநிலங்களிலும் ஆட்சி பீடத்திலிருந்து அது இறக்கப்பட்டுவிட்டால், அது எங்கு ஆட்சி புரியும்? தமிழ் நாட்டில் தமிழே ஆட்சி மொழி என்ருல் இறக்கப்படுவது ஆங்கிலம்தான். இதனைத்தான் இன்று நம் முன் எழுந்துள்ள பிரச்சினை **இந்தியா? தமிழா? என்பது அல்ல. தமிழா? ஆங்கிலமா? என்பதுதான் என்று நேரு** சொன்னுர். இதனை நன்கு சிந்தித்துப் புரிவது நல்லது.

இன்று தமிழகத்தில் தமிழ் ஆட்சிமொழி ஆகவிடாமல் தடுத்துக் கொண்டிருப்பது ஆங்கிலம் தான். இந்தி அல்ல. இந்தக் கேள்விக்கு மழுப்பாமல் நேரடியாகப் பதில் சொல்ல தி.மு.கவும் இந்தி எதிர்ப்பாளர்களும் தயாரா?

நாம் சொல்லும் மொழிக் கொள்கைப்படி 14 மொழிகளும், 14 மாநிலங்களிலும் ஆட்சி மொழியாகும். இந்தி

இணைப்பு மொழியாகும். இந்தி என்ற இடத்தில் ஆங்கிலம் இருக்கவேண்டும் என்பதை நாம் ஏற்க மறுக்கிறேம். காரணம் அது இந்நாட்டு மக்கள் மொழியல்ல என்பதால்.

ஒருபுறம், ஜனநாயகம் சோஷலிஸம் என்று பேசிக் கொண்டு சட்டங்கள் அனைத்தும் மக்களோடு தொடர்பற்ற மொழியில் இருப்பது, நிர்வாக இயந்திரத்தை ஜனநாயக முறைப்படுத்தாது. மக்கள் நிர்வாகத்தில் பங்கு கொள்ளத் துணைபுரியாது. ஜனநாயகம், சோஷலிஸம் ஆகியவற்றின் உண்மைப் பொருளுணர்ந்தோர் இந்த 'ஆங்கில ஆதிக்க' எதிர்ப்பை விளங்கிக் கொள்ளலாம்.

ஆங்கில ஆதிக்கம் கூடாது என்று நாம் கூறுவதால், நமக்கு ஆங்கிலம் தெரியாது என்றே, அதன் சிறப்பு, வன்மை புரியாதவர்கள் என்றே யாரும் தவருக எண்ண வேண்டாம். ஆங்கிலத்தின் சிறப்பை நன்கறிவோம். ஆகையால்தான் அது ஒரு மொழியாக இந்தியாவில் தொடர்ந்து கட்டாயமாகக் கற்கப்படவேண்டும் என்கிறேம். **ஆங்கில மொழியை அல்ல, அதன் ஆதிக்கத்தைத்தான் எதிர்க்கிறேம்.** ஆங்கிலம் மேலும் அதிகம் பரவலாக, ஊன்றிக் கற்கப்பட வேண்டும். ஆங்கிலம் ஆட்சிமொழியாக இல்லாவிட்டால், யார் படிப்பார்கள்? என்று கேட்கிருர்கள் இதிலிருந்தே, இந்தியாவில் ஆங்கிலம் தொத்திக்கொண்டிருப்பதற்கு ஒரே காரணம் அது ஆட்சி மொழியாக இருப்பதுதான் என்று கொள்ளலாமா? மாருக, அடுக்கி அடுக்கிச் சொல்லப்படும் பெருமையுடைய ஆங்கிலத்தை நம் மக்களும் அதன் அருமை உணர்ந்து படிக்கட்டுமே.

ஆட்சிமொழியாக இல்லாதிருந்தும் எங்கள் தமிழ் நூற்றுண்டிற்கும் மேலாய் சாகவில்லை. ஆங்கிலமும் ஒரு நூறுண்டுககாலம், இங்கு இருந்து, அதுவும் இந்திய மொழியே என நிறுவட்டுமே?

ஆட்சிமொழி பீடத்திலிருந்து அதனைப் பத்தாண்டு விலக்கி விட்டு, பின்னர் அது இந்திய மக்களின் மொழியா? நிர்வாக மொழி மட்டுமா? என்பதைச்

சொல்லிவிடலாம், இச்சோதனைக்கு அஞ்சுகிறார்கள் மெத்தப் படித்த மேதாவிகள். ஆனால் இச்சோதனைகளை யும் வென்ற இந்திய மொழிகளுக்கு அந்த இடத்தைக் கொடுக்கவும் மறுக்கின்றனர்.

14 மொழிகளையும் ஏற்க வேண்டும் என்போர், ஐ. நா. சபை எல்லா மொழிகளிலும் நடத்தப்படுவதைச் சுட்டிக்காட்டுகின்றனர். இந்த உதாரணம் தவறானது. ஏனெனில் ஐ. நா. அரசு அல்ல. அங்கு நடப்பது விவா தமே. அரசாங்க நிர்வாகம் அல்ல. இங்கு நடப்பதோ அரசாங்கம். ஒரு அரசாங்கத்தின் பணிக்கும், ஒரு சங்கத் தின் பணிக்கும் உள்ள வேறுபாடுகளைக் கூடப் புரிந்து கொள்ளாத அரிதாரங்கள் விளம்பரங் காரணமாக, அறிவு வெளிச்சம் போட முனைவதும் விந்தை மட்டுமல்ல, தமிழ கத்தைப் பிடித்த சாபக்கேடு!

இந்தியப் பாராளுமன்றத்தின் நடவடிக்கைகள் எல்லா மொழிகளிலும் நடத்தப்படவேண்டும் என்பது நியாயம். சரி, ஆனால் அரசாங்க நிர்வாகம் 14 மொழி களிலும் ஏக காலத்தில் நடத்தப்படவேண்டும் என்றால், ஒவ்வொரு மாவட்டத்திலும் 14 கலெக்டர் ஆபீசுகள் கட்டி, மொழி வாரியாக அவற்றுக்குப் பெயரிட்டு, தமிழ் கலெக்டர் அங்கே, வங்கக் கலெக்டர் இங்கே என்று அனுப்பவேண்டும் போலிருக்கிறது. அது அபார அறிவி லிருந்துதான் வெடிக்கவேண்டும்.

14 மொழிகளிலும் சட்டம் கிடைக்க உறுதிவேண்டும். அதற்கும் மேலாக, கம்யூனிஸ்ட் கட்சி கூறுவதுபோல், தமிழகத்தின் எல்லைக்குள் உள்ள மத்திய, மாநில அரசு களின் எந்த அலுவலகம் ஆனாலும் அங்கு நிர்வாகம் தமிழில்தான் நடைபெறவேண்டும். இங்கிருந்து டில்லி யுடன், நிர்வாகத்துடன், தொடர்பு கொள்ளும்போது மட்டுமே கடிதத்தில் இந்தி இடம் பெறவேண்டும். தமிழ் மக்கள் கவர்னர் முதல்—மாஜிஸ்டிரேட் வரை யாருடனும் தமிழில் பேச, தமிழில் எழுத, வாய்ப்பு உறுதி தரப்பட வேண்டும். இவ்வாறு 14 மாநிலங்களிலும் நிர்வாகம் அந்தந்த மாநில மொழியில்தான் நடைபெறும் என்பதைச் சட்டமாக்கினால் இப்பகுதியில் பணியாற்ற வரும்

வங்கத்து முகர்ஜியோ, உத்திரப் பிரதேசத்து லால் சேட்டோ தமிழைப் படித்துத் தேறிவிட்டுத்தான் வர வேண்டும். இல்லையேல் பதவி கிடைக்காது.

இதேபோல் மாம்பலத்து சுப்ராம தீக்ஷிதர் பையன் கல்கத்தாவில் கலெக்டர். ஆனால் அந்த மாநிலத்தைச் சேர்ந்த வங்க மொழியைக் கற்றுகவேண்டும். இவ்வாறு மும்மொழிப் பயிற்சி அனைவர்க்கும் பொதுவாகும்! எனவே உத்தியோகங்களை 'இந்தி' பேசுவோர் ஆக்கிர மிக்க முடியாது.

கம்யூனிஸ்ட் கட்சி இத்துடன் நில்லாது, இந்த ஆட்சி மொழி மாற்றம், மாநிலங்களில் முதலில் நடைபெற வேண்டும் என வற்புறுத்துகிறது. மாநிலங்கள் அனைத் திலும் எல்லா மட்டங்களிலும் எல்லாத் துறைகளிலும் அந்தந்த மாநில மொழி இடம் பெற்ற பின்னர்தான், இந்தியை இணைப்பு மொழியாக்குவதைத் தொடக்க வேண்டும் என வற்புறுத்துகிறது.

அடுத்து உயர்தர உத்தியோகங்களை எல்லாம், இந்தி ஆட்சி மொழியானல்; இந்தி மொழியைத் தாய் மொழியாகக் கொண்டோர் பறித்துக் கொள்வர். ஆக்கிர மித்துக் கொள்வர் என்று கூறுகின்றனர். இக் கூற்றும் முழு உண்மை அல்ல. அரசாங்க உத்தியோகங்களுக்கு மொழிப் புலமை மட்டுமே சோதனை செய்யப்படுவதில்லை. மாறாக, பொது அறிவும், பலவகைப் பொருளறிவும்தான் சோதனை செய்யப்படுகிறது. இதனை ஒரு மொழி மூலம் தெரிவிக்கிறோம்.

உதாரணமாகத் தமிழகத்தில் தமிழே ஆட்சி மொழி என்பதால் தமிழ்க் கவிஞர்களும், புலவர்களும், பண்டிதர் களும் கலெக்டர்களாக, உயர்தரப் போலீஸ் அதிகாரி களாக ஆகிவிடுவார்களா? ஒரு இலாகா தலைவராக தமிழ் பண்டிதர் அமருவாரா? அல்லது தமிழ் தெரிந்த இத்துறை அறிவில் வல்லவர் அதிகாரி ஆவாரா? இதனை யோசிக்க வேண்டும். ஆங்கிலம் ஆட்சி மொழியாக இருந்த காரணத்தால் வெள்ளையர்கள் அனைவரும் ஆள்வோர் ஆகிவிடவில்லை. ஆளும் வர்க்கம் தனி யாகவே இருந்தது.

இது உண்மைதான். இருப்பினும் இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டோருக்கு மற்ற மக்களைக் காட்டிலும் சற்றேனும் அதிக சாதகம் இருப்பது உண்மை அல்லவா? எனக் கேட்கலாம். இதற்கு மூன்று வகைகளில் நாம் பாதுகாப்புத் தேடமுடியும். ஒன்று இந்தி மொழி பேசும் பகுதியிலிருந்து இத்தேர்வுப் போட்டியில் பங்கு கொள்ளும் அதே நபர், பிற இந்திய மொழி ஒன்றில் தேர்வு பெறவேண்டும் என்பதைக் கட்டாயமாக்குவது.

இரண்டாவது, வட்டார வாரியாகவும், மக்களின் எண்ணிக்கைக் கேற்பவும் பிரதிநிதித்வம் ஒதுக்கச் சட்டம் செய்வது.

மூன்றுவதாக, அகில இந்தியப் பதவிகளுக்கு நடக்கும் தேர்வுகளைப் பரிசீலிக்கையில், ஒவ்வொரு மாநிலத்திலும் அம்மாநிலத்திலிருந்து எழுதுவோரிடையே மட்டும்தான் தரவாரி பிரித்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். உதாரணமாக தமிழ் நாட்டில் இருந்து 10 பேரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றால், இங்கிருந்து எழுதுவோர் இடையிலிருந்துதான் முதல் 10 பேரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமேயல்லாது, இந்தியைத் தாய் மொழியாகக் கொண்ட ஒரு நபருடன், புதிதாகப் படித்துப் போட்டியிடும் பிற மொழிப் பேசும் ஒருவரை எடை போடக்கூடாது. இதுபோன்ற பாதுகாப்புக்களை இன்னும் நுணுக்கமாகத் தேடுவதன் மூலம், இதனால் பாரபட்சம் விளையாமல் தடுக்க முடியும். திண்ணை இருந்தால் பிச்சைக்காரன் வந்து படுத்து விடுவானே என்று பயந்து திண்ணையே வேண்டாம் என இடிக்கும் 'வள்ளல்களாகி' விடக்கூடாது.

இந்தி மொழி, ஆட்சி மொழியானல் இந்தியாளர் ஆதிக்கம் வரும்என வாதிடும் இதே தோழர்கள், நாளைக்கு இந்தி பேசுவோரின் எண்ணிக்கை தனிப்பெருமளவில் இருப்பதால் அவர்களது ஏராளமான வாக்குகளுடன் இந்திய அரசினைக் கைப்பற்றி ஆளும் அபாயம் உண்டு. எனவே பிரிந்துவிட வேண்டும் என வாதிட மாட்டார்களா? நாளைய அந்தப் பிரச்சாரத்துக்கு இன்றைய ஆலாபனம்தான் இந்தி எதிர்ப்பு.

தி. மு. க. இந்தி எதிர்ப்புப் போர் நடத்துவதே எவ்வளவு பெரிய ஏமாற்று வேலை என்பதைப் பாருங்கள். ஒரு தீர்மானத்தில் 14 மொழிக் கொள்கையை ஏற்றுப் பிரச்சாரம் செய்கின்றனர். அந்த பதினான்கு மொழிகளில் ஒன்று இந்தி. அதுவும் மிகப் பெரும்பாலோர் பேசும் மொழி. இதனைத் தீர்மானத்தில் ஏற்று வற்புறுத்திக் கொண்டு, தங்கள் தீர்மானத்தின் ஒரு பகுதியையே எதிர்க்கும் நாடகம் இங்கன்றி வேறு எங்கும் நடக்காது. தி. மு. க. வின் இந்தி எதிர்ப்புப் போர் அதன் சொந்தத் தீர்மானத்துக்கு எதிரான போரே. அம்முறையில் தமிழுக்கு எதிரான போர். எனவேதான் இப்போராட்டத்துக்கு ம. பொ. சி., ஆதித்தன், ஈ. வெ. ரா. பெரியார் ஆகியோரின் ஆதரவு கிட்டவில்லை. இன்னொரு குற்றச்சாட்டு, இந்தி நிர்வாக மொழியாக பயன்படுமா? என்பது இக்கேள்வி. இந்திக்கு எதிராக மட்டும் பயன்படுத்தப்பட்டால் ஏதோ காரணமுண்டோ என நினைக்கலாம். ஆனால் இதே குறை ஆளுனைப்பட்ட தமிழ் மொழிக்கு எதிராகவும் 'பேதையர்' சிலரால் வீசப்பட்டது என்பதை மறக்க வேண்டாம். இன்று இந்தியாவில் உள்ள எந்த மொழி ஆட்சி மொழி ஆனாலும், அவை ஆங்கில மொழியின் துணையை சில ஆண்டுகள் நாடித்தான் தீர வேண்டும். சில பல சொற்களையும், சொற்றொடர்களையும் கடன் வாங்கிக் கொள்வது தவிர்க்க முடியாததாகும். இதில் ஒன்றும் பத்தினி விரதம் தேவையில்லை. அவ்வாறு பத்தினி விரதம் வேண்டுவோர் ஒன்று கூழை விடவேண்டும். இல்லை மீசையை விடவேண்டும். இல்லை ஒதுக்கிவிட்டுக்கொள்வேன் என்றால் கூப்பாட்டை யாவது விடவேண்டும்.

மொழிக் கொள்கை பற்றிப் பேசும்போது, உயர்தர உத்தியோகங்களின் எண்ணிக்கை, பட்டதாரிகள் பதறல் இவற்றை வைத்து முடிவெடுப்பது பச்சைத் துரோகமாகும். "குருடர்களாய், செவிடர்களாய், ஊமையராய்" வாழும் ஏழையர் மீது கருணை வைத்து இதனை மக்கள் கண்கொண்டு பார்க்க வேண்டும். இந்த ஊமையருக்கு வாய் வேண்டும்; இச்செவிடர்களுக்குச் செவி வேண்டும்; இக்குருடர்களுக்கு விழி வேண்டும்; இவர்கள் விழிக்கும்,

வாய்க்கும், செவிக்கும் திண்டாடி அழும்போது, கடிலாக் காரும், கண்கவர் பங்களாவும், நைலான் சாரி நங்கையும் என்று கனவு காணும் ஒரு சில படித்த கூட்டத்தின் அல றல் நமக்குப் பெரிதல்ல. ஆனால் இதனைப் பெறவும் வழி வகையை மேலே கூறியிருக்கிறோம்.

ஆனால் ஆட்சியாளரோ வழக்கம்போல் தலைகீழ்ப் பாடம் படித்தனர். மாநில மொழிகளின் வளர்ச்சியில் இவர் கிஞ்சித்தும் அக்கரை காட்டவில்லை, அது மாற்றாந் தாய் பிள்ளை என அனாதை விடுதிக்கு அனுப்பப்பட்ட கதையாயிற்று.

இந்தி இந்தி என்று சதா கதை பாடினர்.

இந்தியை நிர்வாகத்தில் புகுத்த தேர்வுகள் நடத்தத் தொடங்கினர்.

தபால் தலையிலும், முத்திரையிலும் இந்தி எழுத்தைப் போட்டு, அதனை மக்கள் மொழியாக்கிவிட முடியும் என மனப்பால் குடித்தனர்.

இந்தி வெறியர்களின் கூச்சலுக்குத் தலை சாய்த்தனர். பிடிவாதமாக இந்தியில் பேசினர்.

மொழிவழி மாநில அமைப்பை எதிர்த்தனர். இந்தக் கிளர்ச்சியில் ஈடுபட்ட மக்களைச் சுட்டனர். தான்தோன் றித் தர்பார் தலைவிரித்தாடியது.

பயிற்சி மொழிக் கொள்கையில் திரு. சுப்பிரமணியம் செய்ததை பக்தவத்சலம் அழித்துத் துடைக்கிறார்.

உமாயூன் கபீர், மாநில மொழியே பயிற்சி மொழி என்கிறார்.

பக்தவத்சலமோ ஆங்கிலமே என்கிறார்.

சுருங்கச் சொன்னால் ஒரே குழப்பம். கட்சிக்கென ஒரு கொள்கை இல்லாமல் ஆளுக்கொரு கொள்கையாகி விட்டது.

தி. மு. க. வின், சுதந்திராவின் மொழிக் கொள்கை யைப் பக்தவத்சலம் கடைப்பிடிக்கிறார்.

நேருஜி பேசும்பொழுது மாநில மொழிகள் ஆங்கிலத் தின் இடத்தை நிரப்பும் என்றார். பக்தவத்சலமோ ஆங்கி லத்தைக் கட்டிக் காத்திடுவேன் என்கிறார்.

இந்நிலை நீடிக்கும்வரை தாய் மொழிக்குப் பாதுகாப்பு ஏற்படாது. அவரவர் தாய் மொழிக்குப் பாதுகாப்பு, வளர்ச்சிக்கு முழு உத்திரவாதம் கிடைக்காத வரையில், இந்தியை இந்தியாவின் இணைப்பு மொழியாக்க முயல்வது எதிர்ப்பையும், சந்தேகத்தையும்தான் வளர்க்கும்.

ஆட்சியாளர்கள் தங்களது கொள்கைக் கோளாறை முதலில் திருத்திக்கொள்ள வேண்டும்.

1975–இல் இந்தி இணைப்பு மொழியாக்கப்படலாமா என ஆலோசிக்க, எல்லா மாநிலங்களின் பிரதிநிதிகளும் அழைக்கப்படுவர். அவர்களின் சம்மதம் பெற்றே இம்மாற்றம் நடைபெறும் எனக் கூறியிருப்பது நல்லது. ஆனால் அத்துடன் 1975–க்குள் எல்லா மாநிலங்களிலும் அந்தந்த மாநில மொழிகள் ஆட்சி மொழியாக, நீதிமன்ற மொழியாக, பயிற்சி மொழியாக, சரியான முறையில் திட்டம் தீட்டி மக்களின் ஒத்துழைப்புடன் அதனை நிறைவேற்றி முடிக்க வேண்டும்.

1975–இல் கூடும்போது எல்லா மாநிலங்களிலும் மக்களின் மொழி இந்த நிலையை அடைந்து இருந்தால் தான், அடுத்து இந்தி மொழி மாற்றம்பற்றிப் பேசும் சூழ் நிலை கிடைக்கும். மாறாக, இதே நிலை நீடித்தால் 1975-இலும் சந்தேகம், பயம் நீடிக்கத்தான் செய்யும்.

இந்தி இணைப்பு மொழியாவதன்மூலம் எந்த மாநில மொழிக்கும், எவ்விதப் பங்கமும் வராது என்பதையும், இந்தி பேசும் மக்கள் பிற மொழிகளைச் சமமாகக் கருதுகிறார்கள், விரும்பிப் படிக்கிறார்கள் என்ற நிலையையும் உருவாக்க வேண்டியது முதற் கடமையாகும்.

இதனை விடுத்து இந்தி வெறியர்களின் அச்சுறுத்தலுக்குச் செவிசாய்த்து, மாநில மொழிகளை மாற்றாந்தாய் பிள்ளைகளாகக் கருதி நடந்துகொண்டால் விளைவு பயங்கரமாக இருக்கும்.

செப்பும் மொழி பலவாக இருந்தாலும், சிந்தனை ஒன்றுடன் வளர்ந்து முன்னேற இந்தப் பக்குவச் சூழ்நிலையை உருவாக்க வேண்டியது இந்திய ஒருமைப்பாட்டில் நாட்டமுள்ளோரின் கடமையாகும்.

இதனை மறந்து தி. மு. க. நடத்தும் போராட்டத்தை அரசாங்கம் 'அடக்கிக்கொள்ளும்' என நினைத்தால், அது பெரும் தவறாகும். இது 'அடக்கும்' பிரச்சினையல்ல. தெளிவு படுத்தவேண்டிய ஒன்று. தி, மு. க. போராட்டத்தால் தமிழுக்கு நேரக்கூடிய பேராபத்தை எடுத்து விளக்கிச் சொல்லி, ரயிலை நிறுத்தப்போகும் தம்பியை நாம் நிறுத்த வேண்டும். சட்டத்தை எரிப்பதாகச் சொல்லி தமிழ் மொழியின் வளர்ச்சியை, வாழ்வைக் கொளுத்துவதைத் தடுக்க வேண்டும். மறியல் அலுவலகத்தின் முன்னரா? தமிழின் முன்னேற்றத்தின் பாதையிலா? என்பன போன்ற கேள்விகளுக்குத் தி. மு. க. விடமிருந்து நாம் விடை பெற முயலவேண்டும்.

தி. மு. க. வைப் பொறுத்த மட்டில், அதன் தலைவர் அண்ணுதுரை சொன்னதுபோல் எந்தக் கழி கிடைத்தாலும் அதைக்கொண்டு பாம்பை அடிப்பதுபோல், எக்கட்சியுடனும் சேர்ந்து, காங்கிரசை முறியடிப்பது அவரது லட்சியம்.

இதே முறையில்தான் பல்லாண்டுக்குப் பின்னர் முதன் முதலாக சென்னைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் தேன் தமிழில் சொற்பொழிவாற்றி வரலாறு படைத்த சி. சுப்பிரமணியத்தைக் காங்கிரஸ்காரர் என்ற காரணத்தால் எதிர்க்கிருர். தமிழ் வளர்க்கப் பாடுபட்ட நண்பர் என ஏற்க மறுக்கிருர். ஆனுல் உருதிலேயே பேசி, உருது மொழியையே வேத மொழியாகவும் வீட்டு மொழியாகவும் கொண்ட லீக் கட்சியினருடன் இந்தி எதிர்ப்புக்குச் சேர்ந்து நிற்கிருர்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் தொடர்ந்து துணை வேந்தராய் நீடிக்கும் முதலியார் தமிழைச் துச்சமென மதிப்பவர் என்ருலும், இந்தி எதிர்ப்புக்கு நண்பர் ஆகி விடுகிருர்.

இந்தி வெறியரான டாக்டர் லோகியாவின் வெற்றி காங்கிரசுக்கு எதிராக இருந்ததால் ஜனநாயக வெற்றியாக இவருக்குப் பட்டது. ஆனுல் மனேகரன் மட்டும் ஐயோ இந்தி வெறியரின் வெற்றி ஆயிற்றே என்ருர். உங்களுக்குள் இரு கருத்துக்கள்.

அதேபோல் அங்கும் ஒரு பக்தவத்சலம் முதலியாரும் சி. சுப்பிரமணியமும் இருக்கிறார்கள்.

சி. சுப்பிரமணியத்தின், கபீரின், நேருவின், ராதா கிருஷ்ணனின் மொழிக் கொள்கையை நாங்கள் ஆதரிக் கிறோம்.

ஆனால் பக்தவத்சலம் கொள்கையை ஏற்க மறுப்ப துடன் திருத்தப் போராடுகிறோம், தொடர்ந்து போராடு வோம்.

இன்று நடத்தவேண்டிய முதல் போராட்டம், தமிழைப் பயிற்சிமொழியாக்க, ஆட்சிமொழி ஆக்க, நீதி மன்றமொழியாக்க நடத்தப்படவேண்டிய போராட்ட மாகும். ஆனால் பக்தவத்சலத்தை எதிர்க்க நெடுஞ் செழியன் முன்வருவாரா ? சங்கடமல்லவா ? அவருக்காக மொழிக் கொள்கையையே மாற்றிச் சொன்னவராயிற்றே.

தி.மு.க. முதலில் மும்மொழிக் கொள்கையை ஏற்று, பின்னர் மறுத்தது, இப்பொழுது மீண்டும் ஏற்று, தமிழ் வளரத் துணைபுரியலாம்.

தி.மு.க தேர்தலில் வெற்றிபெற இப்போராட்டத்தை ரிகர்சல் நடத்திப் பார்க்கிறது. என்றால், நடத்தட்டும். ஆனால் அந்த நாடகமும் மங்களமாக முடியப்போவ தில்லை.

நம்மைப் பொறுத்தமட்டில் இந்தி மறைமுகமாகவோ, நேரடியாகவோ திணிக்கப்படுவதை விரும்பவில்லை. எதிர்க்கிறோம்.

முதலில் 14 மாநிலங்களிலும் அந்தந்த மாநில மொழிகள் தங்களுக்கு உரிய இடத்தைப் பெறவைக்க எல்லா முயற்சிகளையும் உடனே செய்யவேண்டும் என வற்புறுத்துகிறோம்.

∴ தாய்மொழிக்காக தாய் நாட்டின் ஒற்றுமையைப் பலி கொடுக்க மாட்டோம்.

∴ தாய் நாட்டுக்காகத் தாய் மொழியைப் பலி கொடுக்க மாட்டோம்.

ஒன்றைக்காக்க ஒன்றைப் பலி கொடுக்காமல், இரண்டினையும் காப்போம். அதற்கென செய்யவேண்டிய எத்தியாகமும் நமக்கு அற்பம்!

கடைசியாக ஒன்று. தமிழை இந்தி அழித்துவிடும் எனும் அலறல். தமிழை அவமானப்படுத்த முயலும் பிதற்றலே இது. தொன்மைமிக்க மொழியான சமஸ் கிருதம் மோதி மாண்டது. ஆங்கிலம் சவாரியே செய்தது 150 ஆண்டுகளாய். இத்தனை காலவெள்ளத்தையும் தாண்டி இன்பத் தமிழாகவே விளங்குகிறது. சாகவில்லை. வடமொழியும், ஆங்கிலமும் சாகடிக்க முடியாத, வான மளந்தது அனைத்தும் அளந்து வளர்ந்திடும் வன்மொழியை இலக்கணமும், இலக்கியமும், இல்லாத, தரங்கெட்ட,— உங்கள் பாணியில் பஜார் மொழியா, வந்து அழித்துவிடப் போகிறது?

தமிழை அழிக்கும் ஆற்றல் எம்மொழிக்கும், எக் கட்சிக்கும் இல்லை. ஆனால் அதன் வளர்ச்சிக்கு இன்று ஆங்கிலம் தடை போட்டிருப்பதைப் போலப் போடலாம். அந்நிலைக்கு இந்தி வந்தால் எதிர்ப்போம். ஆனால் அது வருவது இணைப்புக்கான பணிப்பெண்ணுகை. அரசியாக அல்ல.

பணிப் பெண்ணுகத்தான் வருவாள். பிறகு பவுடர் போட்டு வருவாள். அதன் பின்னர் மினுக்கிக் கொண்டு தளுக்கு நடை நடந்து வருவாள். விரைவில் பெட்டிச் சாவியே அவள் கைக்கு மாறி எஜமானியாகிவிடும், என்று ஒரு பெரிய மனிதர் எச்சரித்தார். விசாரித்ததில் அவர் வீட்டில் 'கூட' அப்படிப்பட்ட விபத்து நடந்திருப்ப தாகத் தெரியவில்லை. அவர் வீட்டிலேயே அந்த விபத்து இல்லையென்றால், மற்றவர்கள் வீட்டில் நிச்சயம் இராதல்லவா?

ஏமாந்த ஏழாந்தரப் பேர் வழி வீட்டில் இதுவும் நடக்கும். இன்னும் ஏதேதோகூட நடக்கும். ஆனால் விழித்திருப்போர், நடந்த விபத்துக்களிலிருந்து நல்ல பாடங்களைப் படித்திருப்போர், தமிழின் பெயரால் இந்தி எதிர்ப்பு என மாய்மாலப் பேச்சுப்பேசி, அப்போராட்டத்

துக்கு திராவிடநாடு பிரிவினைக் கோரிக்கையையே முதல் பலியிட்டாலும்கூட, 'அகாரணமாய்த்' தமிழை நிறுத்த நாம் அனுமதிக்கக்கூடாது. நிறுத்துபவர் பக்தவத்சலமாகு வும் அண்ணாதுரையானாலும் தமிழின் முன்னேற்றத்தை இழுத்து நிறுத்தும் குற்றவாளிகளே.

தமிழா! தூங்காதே! உன் தொடையில் அல்ல உன் தொடையையே கயிறுகத் திரிக்கப் பார்க்கிறுர்கள்.

விழித்துக்கொள்! உன் மொழியைக் காத்துக்கொள்.

வாழிய செந்தமிழ்

வாழ்க நற்றமிழர்

வாழிய பாரத மணித்திருநாடு.

  

# எங்கள் பணி

ஆட்சிமொழிபற்றிய நமது கருத்துக்களை ஏற்கனவே கூறி முடித்துவிட்டேன். அண்மையில் மதுரையில் நடந்த ஒரு கூட்டத்தில் அண்ணாதுரையுடன் ஒரே மேடையில் பேச வேண்டியதாயிருந்தது. வழக்கம்போல் காலதாமத மாக வந்த அண்ணாதுரை, அக்கூட்டத்தில் ஏற்பட்டிருந்த கூச்சலுக்கு எது காரணமாக இருந்திருக்க முடியும் என யூகித்துக்கொண்டு சில பதில்களைச் சொன்னார்.

அவ்வாறு அவர் பேசும்பொழுது கம்யூனிஸ்டுக் கட்சியும் 14 மொழிக் கொள்கைகளை ஏற்றுள்ளது என்று குறிப்பிட்டார். இது உண்மைதான். தி.மு.க. 14 மொழி களும் இந்தியாவின் மத்திய அரசின் ஆட்சி மொழிகள் என்கின்றது. கம்யூனிஸ்டுக் கட்சி 14 மாநிலங்களுக்கும் 14 மொழிகளை ஆட்சிமொழியாக்கவும், இந்தியாவின் மத்திய அரசுக்கு 1975 வரை இந்தியும், ஆங்கிலமும், அதன் பின்னர், சட்டம் கூறுவதுபோல், இந்தி பேசா தோரின் சம்மதம் பெற்று இந்திதான் இணைப்பு மொழியாக வேண்டும் என்பதாகும்.

இந்தியே கூடாது என்று கூறிவந்த தி. மு. க. இந்தியை 14 மொழிகளில் ஒன்ருக ஏற்றிருப்பது, சற்றே நல்ல மாற்றம்தான். திராவிட நாடு, திராவிட கூட்டமைப் பாக மாறியுள்ளதுபோல. ஆனல் தனக்கெனத் தனிப் பாதை வகுத்துக் கொள்ளாமல் மற்ற முற்போக்குக் கட்சி களின் யோசனையை மொழிக் கொள்கையிலாவது ஏற்பது நல்லது.

தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சி.யை தமிழ் துரோகி என்று எவனுவது சொல்ல முடியுமா? தமிழ் நாடு, தமிழ் என்றே பேசி பொழுதைக் கழிப்பவராயிற்றே. அவரே இம்மொழிக் கருத்தை ஏற்றுள்ளார்.

இந்தி எதிர்ப்பின் தந்தை ஈ. வே. ரா. கூட இந்த சட் டத்தை வரவேற்றுவிட்டார்.

டாக்டர் ஏ. கிருஷ்ணசாமியும் இந்த சட்டம் போதுமானது என வரவேற்றுள்ளார்.

எனவே தி. மு. க. இதுபற்றி மீண்டும் அமைதியாக யோசிப்பது நல்லது.

அடுத்து, அதே மதுரைக் கூட்டத்தில் தி. மு. க. எதிர்ப்பில் தமிழார்வத்தைக் கொன்று விடாதீர்கள். நல்ல தமிழ் பேசுவதால்தான் தி. மு. க. வளர்கிறது. எனவே தமிழை அழித்தால்தான் தி. மு. க. அழியும் என நினைத்துத் தமிழை அழிக்க முற்பட்டால், தமிழும் அழியாது, நாங்களும் அழிய மாட்டோம் என்று பெருமையாகக் கூறிக்கொண்டார். எதையும் தங்களால்தான் நடந்தது, நடக்கிறது என்று பேசுவதில் தி. மு. க.வுக்கு நிகர் தி. மு. க. தான்.

தமிழ் பிறந்ததே தி. மு. க. பிறந்த பிறகுதான் என்று நம்புமளவுக்குப் பிரச்சாரம் செய்யும் ஆற்றல் அவர்களிடம் உண்டு. ஆனால் பேச்சைக் கேட்காமல் பேசிய அண்ணாதுரைக்கு இந்த எண்ணம் வருவானேன்? தமிழார்வத்தைக் குறைக்கும் முறையில், மொழி வெறியென, ஆர்வத்தைக் கண்டித்திருக்கக் கூடும் என நினைப்பதேன்?

நான் சந்தித்த வேறு பல நண்பர்களும் இதேபோல் சொன்னார்கள்.

தொழிலாளர் நலனுக்காய் ஓயாது பாடு படுகின்றவர்கள்

—யாரும் மறுப்பதில்லை.

தியாகத்துக்கு அஞ்சாதவர்கள்

—மறுப்பாரில்லை.

உயர் கொள்கையுடையோர்

—மறுப்பாரில்லை.

ஆனால், தமிழகத்தில் தமிழ் மணத்தோடு நீங்கள் இயங்குவதில்லை, என்று பரவலாகப் பலரும் குற்றம் சாட்டக் கேட்டிருக்கிறேன். எந்தக் குறையையும் உண்மை என்றால், பகிரங்கமாக ஏற்கும் பரம்பரையில் வந்த நாம், நம்மிடம் குறை இருந்தால் களைவது நல்லது.

செய்யவே இல்லையா ?

செய்ததைச் சொல்லவே இல்லையா? செய்தும்—செய்யும் ஆற்றலிருந்தும்—சொல்ல மறந்து வீண் பழி ஏற்றோமா ?

தமிழகத்தில் முதன்முதலாக ஒரு புத்தகத்தை தமிழில் மொழி பெயர்த்ததற்காக தண்டனை பெற்றவர் நம் ஜீவா அல்லவா ?

இராமநாதபுரம் காங்கிரஸ் மகாநாட்டில் இந்தி எல்லா மட்டத்திலும் என்பதை எதிர்த்துத் தீர்மானம் கொண்டு போய், தமிழகத்தில் தமிழே ஆட்சி மொழி, நீதிமன்ற மொழி, பயிற்சி மொழி என முழங்கியோர் ஜீவா, முகவை போன்றோர் அல்லவா ?

நாடோடிப் பாடல்கள் செல்லரித்துப் போய்விடாமல் சேர்த்துத் தொகுத்து வெளியிடுபவர் தோழர் வானமாமலையல்லவா ?

தமிழில் பயிற்சி முடியாது என்று அமைச்சர் பக்தவத்சலம் கூறியவுடன், தமிழில் நூல்கள் எழுதித் தரத் தயார்! என அறிவித்த பேராசிரியர் நம்மவர். பலவற்றில் சில உதாரணங்கள் இவை.

தமிழ் மொழி ஆர்வத்தை மேடைக் கலை மூலம், நாடகத்தின் வாயிலாய், பத்திரிகைகள் மூலம் தமிழகத்தில் பரப்பிய பங்கு நமக்கும் உண்டு.

எங்களுக்கே உண்டு என்னும் தி. மு. க.

எமக்கும் உண்டு என்கிறோம் நாம். ஏனெனில் தமிழ் வளர்ச்சிக்கு பாடுபட்டோர் பலரோர். பிறரின் சேவையைக் குறைத்து மதிப்பிடலாகாது.

கம்யூனிஸ்டுக் கட்சியினர் அழகுத் தமிழில் பேசுகிறார்களில்லை. அடுக்கு மொழியில் எழுதுகிறார்கள் இல்லை, என்று குற்றம் சாட்ட நினைக்கலாம்.

தமிழ் வளரவேண்டும் என்றால் வெறும் மொழி அறிவு இருந்தால் போதாது. வெறும் அறிவு தாய் மொழிக்குத் துரோகமும் செய்யலாம். வெறும் பற்று இருந்தாலும்

போதாது. அது வெறியாக முற்றலாம், பற்றும் அறிவும் இணைந்திருக்க வேண்டும். இதனைச் செய்ய முயல்வது கம்யூனிஸ்டு கட்சி.

அத்துடன், நாம் தமிழறிவை வளர்த்துக்கொள்வது வேறு, தமிழ் வளர, அடிப்படை அமைப்பது வேறு. இங்கு மொழி வளர, யார் சரியான வழி காட்டுகிறார்கள் என்பது தான் கேள்வி!

தோழர் மோகன் குமாரமங்கலம் சிறுவயது முதல் இங்கிலாந்திலேயே வளர்ந்தவர். இதனால் ஆங்கிலமே அவரது மொழிபோலாகிவிட்டது. இவர் தன்னைக் கொண்டு, என்னைப் போலவே இந்நாடு முழுவதும் இருக்கும் என முடிவு செய்வதில்லை.

தமிழில் சரளமாகப் பேச முடியாவிட்டாலும், தமிழே பயிற்சி மொழி—ஆட்சிமொழி–நீதிமன்ற மொழி என்கிறார். **அவர் பேசுவது ஆங்கிலத்தில். ஆனால் அவர் வாதிடுவது தமிழுக்காக! நினைவிருக்கட்டும்—தமிழுக்காக ஆங்கிலத்தில் வாதிடுகிறார்.**

ஆனால் தீந்தமிழில் பேசும் பலர், தமிழில் ஆங்கிலத்துக்குப் பரிந்து, அதன் புகழ்பாடுகிறார்கள்.

மோகன் குமாரமங்கலம் தமிழில் பேசாததால் தமிழ் வளர்ச்சி தடைப்படுமா? அல்லது தமிழில் 'தமிழறிஞர்' ஆங்கிலத்தின் புகழ்பாடி ஆங்கிலமே நீடிக்கட்டும் என்பதால் தமிழ் கெடுமா?

எது தமிழார்வத்தைக் கொல்லும்?

தமிழில் பேசும் தமிழன், தமிழை மறந்து, தாய் நாட்டை மறந்து, என்றும் மடியாத அடிமையின் மோகத்தில், ஆங்கில மொழி மயக்கத்தில் ஆழ்ந்தால் "கோடரிக் காம்பே!" என்பதையன்றி வேறு என்ன சொல்ல முடியும்.

எனவே ஆளைவைத்து, கட்சி பக்தியை வைத்து, முடிவெடுக்காமல், தமிழன் என்ற மொழி உணர்வோடும்

இந்தியன் என்ற நாட்டு உணர்வோடும் இந்தச் சிக்கலைத் தீர்க்க முனையவேண்டும்.

தி. மு. க. நடத்தும் போராட்டத்துக்குத் தமிழர்கள் எவ்வித ஆதரவும் தரக்கூடாது. தமிழ் வளர்ச்சியிலும், நாட்டு ஒற்றுமையிலும் நாட்டம் கொண்டோர், இந்தப் போலிப் போராட்ட நாடகத்தின் திரை, களைய, ஒன்றாக இணைந்து நின்று மக்களுக்கு உண்மையை விளக்கும் நடவடிக்கைகளுக்குத் திட்டமிடுவார்கள் என நம்பு கிறோம்.

வாழ்க தமிழ்

வாழ்க புதிய பாரதம்.

